






# கல்கி

# கல்கி பொருளடக்கம்

விரோதிகிருது ஆவணி 27 - செப். 12, 1971





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது

தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53






UPL/6546

கல்கி

மலர் 31
இதழ் 7



தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

--- பாரதியார்

# நாட்டின் நலன்களும் திட்டத் தராதரங்களும்

**க. சந்தானம்**

திட்டக் கமிஷன் புது அங்கத்தினர்களுடன் சீரமைக்கப்பட்டு விட்டது. அதன் தலைவர் மக்கள்சபைத் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டார். இனி கமிஷன் தீவிரமாகச் செயல் புரியுமென்று எதிர்பார்க்கலாம். சமீபத்திய சம்பவங்களின் பலாபலன்களை நன்கு ஆலோசித்து நான்காவது திட்டத்தைத் திருத்தி அமைப்பதே அதன் முதல் வேலையாகும். முந்தைய திட்டக் கமிஷன்கள் நாட்டின் முன்னேற்றம் தங்கள் திட்டப்படி விரைந்து நடக்கும் என்று கற்பனை செய்து கொண்டு நாட்டுக்குச் சாத்தியமில்லாத, உடனடியாக முற்றிலும் உபயோகமில்லாத பல துறைகளில் முதலீடு செய்வித்துவிட்டனர். ராஞ்சியில் நிறுவப்பட்ட கன எஞ்ஜினீரிங் கார்ப்பரேஷன் இதற்கு நல்ல உதாரணம். தொழில் வளர்ச்சியை அதிகமாக மதிப்பிட்டுத் தேவைக்கு அதிகமான பொறி இயல் கல்லூரிகளை அமைத்துவிட்டதால் ஆயிரக் கணக்கான எஞ்ஜினீர்கள் வேலையின்றித் திண்டாடுகின்றனர். இவ்வித தவறுகளைப் புதிய கமிஷன் செய்யாமலிருக்க வேண்டும். கிழக்கு வங்காளத்திலிருந்து பாரதத்தில் சரண் புகுந்திருக்கும் லட்சக் கணக்கான அகதிகளைப் பராமரிக்கும் செலவையும், அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸன் சமீபத்தில் பிறப்பித்திருக்கும் பொருளாதார முறைகளால் ஏற்பட்டிருக்கும் குழப்பங்களையும் சரிவரக் கணக்கெடுக்காமல் முடிவு செய்தால் அனர்த்தமுண்டாகும்.

திட்டக் கமிஷன் நல்ல முறையில் செயல்படக் கூடுமென்றாலும் இனியும் மேற்கூறிய தவறுகளையே அது செய்யலாம் என்பது கோயமுத்தூரில் ஆகஸ்டு 23ந் தேதி ஒரு மகாநாட்டில் திரு சுப்பிரமணியம் செய்த சொற்பொழிவிலிருந்து புலனாகிறது. வேலையில்லாதவர்களுக்குத் தொழில் கொடுப்பதையே முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்று அவர் கூறிய யோசனையை அனைவரும் ஆதரிப்பர். விலைவாசிகள், ஊதியங்களைக் கட்டுப்படுத்திப் பண வீக்கத்தைத் தடுக்க வேண்டுமென்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனால் அகதிகளால் ஏற்படும் அதிகச் செலவுகளையும், பாகிஸ்தானின் மிரட்டலை முன்னிட்டு நமது பாதுகாப்புச் செலவுகள் அதிகரிப்பதையும் எண்ணித் திட்டத்தின் முதலீடுகளைக் குறைக்கலாகாதென்று அவர் கூறியிருப்பது கவலைக்கிடமாகிறது.

நாட்டின் நலனுக்காகவே அமைக்கப்பட்டிருக்கும் திட்டக் கமிஷன் அதற்கு ஒவ்வாத திட்டங்களை ஏன் சிபாரிசு செய்ய வேண்டும் என்று வாசகர்கள் வினவலாம். தனி மனிதனைப் போலவே ஒரு ஸ்தாபனத்துக்கும் ஒருவித ஆணவமும் சுயநலமும் உருவாகி விடுகின்றன. ஆதிமுதற்கொண்டு புதிய தொழில்களை ஸ்தாபனம் செய்வதும், புதிய அணைக்கட்டுக்களைக் கட்டுவதும், புதிய சாலைகளை நிர்மாணிப்பதும், புதிய தொழில் கல்லூரிகளையும் ஆராய்ச்சிக் கூடங்களையும் நிறுவுவதுமே தனது வேலை என்று திட்டக் கமிஷன் எண்ணி வருகின்றது. ஏற்கனவே உருவாகியிருக்கும் தொழில்களும், ஸ்தாபனங்களும் சரியாக இயங்கி வருகின்றனவா என்பதை மத்திய, மாநில அரசாங்கங்கள் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று பங்கீடு செய்து கொண்டு வந்திருக்கிறது. ஒரு துறையில் இருக்கும் நிலையங்கள் சரிவர இயங்கினாலன்றி, அதே துறையில் புதிய நிலையங்கள் அமைக்கப்படமாட்டாவென்ற நியதி இருந்திருக்குமானால் இப்பங்கீடு நியாயமாக இருந்திருக்கும். ஆனால் இருக்கும் சாலைகளையும், ரயில் பாதைகளையும், தொழிற்சாலைகளையும் சரிவரப் பராமரிக்கப் போதிய பணம் இல்லாமலிருக்கும் பொழுதே மேன்மேலும் அவற்றை விருத்தி செய்வதில் கமிஷன் பிடிவாதமாக இருந்திருக்கிறது. அதன் பலனாகத் தொழில் வளர்ச்சி எதிர்பார்த்ததைவிட மிகக் குறைந்திருக்கிறது. விவசாய வளர்ச்சியின் அளவுகூடத் தொழில் வளரவில்லையே என்று திரு சுப்பிரமணியம் வருந்தியிருக்கிறார். சென்ற மூன்று வருஷங்களாக இந்திய விவசாயம் நன்கு

வளர்ந்ததற்கு முக்கிய காரணம் திட்டக் கமிஷனல்ல, வருண பகவானின் கருணையே. தொழில் வளர்ச்சி குன்றியதற்குத் திட்டக் கமிஷனும், அரசாங்கங்களும் முழுப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

நாட்டின் நலன்களையே கவனித்தால், பொதுச் செலவுகளின் வரிசைக் கிரமம் பின்வருமாறு இருக்க வேண்டும்: (1) நாட்டின் பாதுகாப்பு, (2) அகதிகளின் பராமரிப்பு, (3) விலைவாசிகள் உயராமலும், ரூபாயின் மதிப்புக் குறையாமலும் பாதுகாத்தல், (4) மிதமிஞ்சிய செலவுகளால் ஏற்படும் பணவீக்கத்தைத் தடுத்தல், (5) ஏற்கனவே அமைக்கப்பட்டிருக்கும் தொழிற்சாலைகள் நன்கு, முழுமூச்சுடன் இயங்குதல், (6) வேலைநிறுத்தம், கதவடைப்புப் போன்ற உற்பத்தி இடைஞ்சல்களைத் தவிர்க்கத் தொழிலாளி — நிர்வாகங்களுக்குள் சுமுகமான நல்லுறவு, (7) அன்றாடச் செலவுகளுக்குப் போக, மீதி திரட்டக் கூடிய நிதி அனைத்தையும் வேலையில்லாதவர்களுக்கு உடனே வேலையும் கூலியும் கொடுக்கக் கூடிய திட்டங்களுக்குப் பயன்படுத்தல்.

மத்திய சர்க்கார் தரப்பில் அகதிகளின் செலவைச் சேர்த்து இவ்வாண்டு 400 கோடி ரூபாய் துண்டு விழுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. மாநிலங்களின் வரவு செலவுக் கணக்குகளில் காணப்பட்ட துண்டுகளோடு அதிக வெள்ளம் போன்றவற்றால் ஏற்பட்ட எதிர்பாராத செலவுகளையும் சேர்த்தால் இவ்வருஷத்தில் மற்றும் 400 கோடி துண்டு விழும் என்று மதிப்பிடலாம். இவ்விதம் ஓராண்டில் 800 கோடி அதிக காகித நாணயங்கள் வழங்கினால் ரூபாயின் மதிப்பு மிகவும் குறைந்துவிடும். மத்திய மாநில அரசாங்கங்களின் நடைமுறைச் செலவுகளில் சிக்கனத்தைக் கையாண்டும், நான்காவது திட்ட முதலீட்டில் அவசரமில்லாத இனங்களை ஒத்திப் போட்டும் கூடியவரையில் துண்டு விழும் தொகையைக் குறைக்க வேண்டும். 1962ல் சீன யுத்தத்தினாலும், 1965ல் பாகிஸ்தான் போரினாலும் ஏற்பட்ட அதிகச் செலவுகளைக் கவனித்து மூன்றாவது திட்டத்தின் முதலீடுகளைக் குறைக்காமல் இருந்ததால் ரூபாயின் நாணய விகிதத்தைப் பெரிதும் குறைக்க வேண்டியிருந்தது. அவ்வித நெருக்கடி மீண்டும் நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஆதலால் திட்டக் கமிஷன் முன் ஒரு சிக்கலான பிரச்னை தோன்றியிருக்கிறது. நான்காவது திட்ட முதலீடுகளைக் குறைக்காமல் அதன் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் விலைவாசிகள் அதிகரித்து, பணவீக்கம் பெருகி, ரூபாயின் பெறுமானம் குறைந்துவிடும். திட்ட முதலீட்டைக் குறைத்துத் தொழில் விவசாயத் துறைகள் திறமையுடன் இயங்குவதையே தனது முக்கிய பணியாகக் கொண்டால் நாட்டின் நலம் பெருகும். பாரபட்சமின்றி, மத்திய, மாநிலங்களுக்குச் சரியான புத்திமதி கூறி, வீண் விரயத்தைத் தடுத்து, அபாயங்களைப் பற்றி எச்சரிக்கை செய்வதே தனது உடனடியான கடமை என்று தீர்மானிக்குமானால், திட்டக் கமிஷன் நல்ல சேவை செய்யக் கூடும்.

# மீண்டும் மது அரக்கன்!

தமிழக அரசு மதுவிலக்குச் சட்டத்தைத் தாற்காலிகமாக ரத்துச் செய்வதற்கு அனுமதி அளிக்கக் கூடாது எனக் கோரி சென்னை ஹைகோர்ட்டில் ஒரு வழக்குத் தொடரப்பட்டிருந்தது. ஆகஸ்ட் 31ந் தேதி கோர்ட் கூடியவுடன் பிரதம நீதிபதி கவர்னரின் அவசரப் பிரகடனம் வெளியாகியிருப்பதால் ஆட்சேப மனு பயனின்றிப் போய்விட்டது எனக் கூறி வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார்.

ஹைகோர்ட் ஃபுல்பெஞ்சிடம் தோல்வி அடையாமல் கவர்னரைக் கொண்டு அவசரச் சட்டம் பிரகடனம் செய்ததைத் திரு கருணாநிதி தமக்கு ஒரு பெரிய வெற்றியாக எண்ணிவிட்டார்! பொதுமக்களின் கருத்தை எதிர்த்துத் தாம் செய்த மகா யுத்தத்தில் தமக்குப் பெரிய வெற்றி கிட்டியதாக எண்ணி இந்த வெற்றியை விழாவாகக் கொண்டாடியிருக்கிறார் திரு கருணாநிதி. மதுவிலக்கிலிருந்து மதுபானத்துக்குத் திரும்புவதைப் பெரிய விழாப் போல் ஏற்பாடு செய்து விட்டார் முதன் மந்திரி.

விழாக் கொண்டாடினாலும், உண்மையில் மதுவிலக்கை ரத்து செய்ததன் பலன் என்ன என்பதும் அன்றைக்கே வெளியாயிற்று. மதுவிலக்கை எடுத்ததால் மாதர் உலகம் படத் தொடங்கிவிட்ட சொல்லொணாக் கொடுமைக்கு அத்தாட்சியாக அடியில் வரும் செய்தியைப் பாருங்கள்!

“கோவைக்கு அருகேயுள்ள பல்லடத்தைச் சேர்ந்த ஓர் ஆலைத் தொழிலாளியின் மனைவி, தன் கணவனைச் சாராயம் குடிப்பதிலிருந்து தடுக்க முடியாததால் தற்கொலை செய்து கொண்டாள் எனத் தெரிய வருகிறது. அவளுடைய கணவன் வாங்கி வந்த சாராயத்தில் விஷத்தைக் கலந்து தானே குடித்துவிட்டதாகத் தெரிகிறது.”

மது விற்பனை தொடங்கிய முதல் நாளே சென்னை நகரத்தில் மட்டும் 576 பேர்களைப் போலீசார் கைது செய்ய நேர்ந்திருக்கிறது. குடி போதை, கள்ளுக் கடைக்கு முன்னால் பொதுவிடத்தில் ஒழுங்கீனம் விளைவித்தது, காலித்தனம் செய்தது, தெருச் சண்டை போன்ற பல குற்றங்களுக்காக இவர்கள் கைது செய்யப்பட்டனர்.

மது என்றால் என்ன என்றே தெரியாத இளைஞர்கள் இந்த அரக்கனுக்குப் புதிதாகப் பலி வைக்கப்பட்டிருக்கிறார்கள். இருபதாண்டுகளுக்கு முன் மது விற்பனை இருந்தபோது மக்களுக்குச் சம்பிரதாயமான கட்டுப்பாடுகளில் இருந்த பயமும் அடக்கமும்கூட இன்றையத் தலைமுறையினருக்கு இல்லை எனலாம். எனவே இப்போது மது அரக்கனுக்கு எளிதில் பெரிய வேட்டை கிட்டும். இந்தச் சீர்கேடான நிலை தமிழகத்துக்கு வேண்டாம் என்றுதான் மக்கள் எல்லோரும் விரும்புகிறார்கள்.





## வாழ்த்தி வழி அனுப்புகிறோம்!

வயலின் வித்தகர் ஸ்ரீ லால்குடி ஜயராமனும், வேணுகான விற்பன்னர் ஸ்ரீ என். ரமணியும் நமது இசைச் செல்வத்தைப் பரப்ப அமெரிக்காவுக்குச் சென்றிருக்கிறார்கள். வித்வத்தில் தேர்ந்தவர்கள். ரசிகர்களின் பேராதரவைப் பெற்றவர்கள். அதோடு அடக்கத்துக்குப் பேர்பெற்றவர்கள். இவர்களது அருங் கலையை மட்டுமின்றி அமரிக்கையையும் கண்டு அமெரிக்கா புகழ்மாலை சூட்டும் என முன்கூட்டியே சொல்லி விடலாம். அவர்கள் தங்களுக்கு மட்டுமின்றித் தாய்நாட்டுக்கும் பெயரும் புகழும் பெற்றுத் திரும்பி வரக் கலைவாணியைப் பிரார்த்திக்கிறோம்.

நியூயார்க்கைச் சேர்ந்த ரசிகப் பிரமுகர் ஸ்ரீ வி. கே. விசுவநாதனின் நன்முயற்சியில் நிறுவப்பட்டுள்ள ''கிழக்கு — மேற்கு பரிவர்த்தனைக் கழக'' (East - West Exchange Inc)த்தின் ஆதரவில் இவ்விரு கலைஞர்களும் தனித்தனியாகவும் சேர்ந்தும் அமெரிக்காவில் இருபதுக்கு மேற்பட்ட இடங்களில் இன்னிசை வழங்கவிருக்கிறார்கள். சுற்றுப் பயணம் சுமார் ஒன்றரை மாதங்கள் நடக்கும்.

ஸ்ரீ ஜயராமன் — ரமணியுடன் செல்லும் மிருதங்க வித்வான் திருச்சி ஸ்ரீ சங்கரன் கனடா, டோரன்டோவிலுள்ள யார்க் சர்வகலாசாலையில் ஒன்பது மாதங்கள் தங்கி மிருதங்க போதனை அளிக்கப் போகிறார். ஸ்ரீ சங்கரன் , ஜினீவாவிலும் லண்டனிலும் ஸ்ரீ ஜயராமனுக்கும், ஸ்ரீ ரமணிக்கும் பக்கவாத்தியம் வாசிப்பதுடன் அமெரிக்காவிலும் சில கச்சேரிகளில் பங்கு கொள்கிறார். ஏற்கெனவே வெஸ்லியன் சர்வகலாசாலையில் போதகராக இருந்து வரும் ராமநாதபுரம் ஸ்ரீ ராகவன் ஏனைய அமெரிக்கக் கச்சேரிகளில் மிருதங்கம் வாசிக்கிறார்.

# கல்விக் கோயிலின் வெள்ளி விழா

சென்னை விவேகானந்தா கல்லூரியின் பெருமையை அனைவரும் அறிவர். 'மனிதனை மனிதனாக்குகிற கல்வி முறை வேண்டும்' என்று கூறிய மகான் விவேகாநந்தரின் திருப் பெயரைக் கொண்ட இக்கல்லூரி, அவரிட்ட ஆணையின்படி பல மாணவர்களை மனித மணிகளாகப் பயிராக்கி வருகிறது. பாடத் திட்டத்தின் கீழ் அமைந்த கல்வியில் மட்டுமின்றி,— கலை வளர்ச்சி, விளையாட்டு, சமூகப் பணி அனைத்திலுமே விவேகாநந்தா கல்லூரி புகழ் பெற்றுள்ளது. இந்தக் கல்விக் கோயிலின் வெள்ளி விழாவை இம்மாதம் 11ந் தேதி ராஷ்டிரபதி தொடங்கி வைக்கிறார். அரிய கண்காட்சியும் அமைக்கப்பட்டிருக்கிறது.

வெள்ளிவிழாவை யொட்டி, கலாசாலையை மேலும் விஸ்தரிக்கவும், இன்னும் பல பாடத் துறைகளை நிறுவவும் திட்டம் இட்டிருக்கிறார்கள். திட்டம் நிறைவேற ஐந்து லட்ச ரூபாய் நிதி தேவைப்படுகிறது. நாட்டின் தலையாய கல்வி நிறுவனங்களில் ஒன்றின் வளர்ச்சிக்கு உதவுவதில் அனைவரும் பங்கு பெறுவர் என நம்புகிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

## மதுவும் ஊதிய உயர்வும்

மதுவிலக்குப் பற்றித் தமிழக அரசாங்கத்தின் போக்கைக் குறித்து 'ஹிந்து'ப் பத்திரிகை (ஆக. 31) தலையங்கத்தில் கூறுவது கவனத்துக்குரியது:

> தேர்தலுக்கு முன்பு ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளங்களை உயர்த்தியதில் அரசாங்கத்தின் செலவு சுமார் ரூ. 20 கோடி உயர்ந்ததாலேயே தமிழ் நாட்டில் மதுவிலக்குச் சட்டத்தை ரத்துச் செய்வதற்கு இவ்வளவு அவசரம் ஏற்பட்டுவிட்டது எனலாம். மதுவிலக்கை அடியோடு ரத்து செய்ததாகச் சொல்லாமல், தாற்காலிகமாக நிறுத்தி வைத்திருப்பதாகச் சொல்வதிலிருந்து இந்த நடவடிக்கைக்கு எதிராகக் கணிசமான பொதுமக்களின் கருத்து உள்ளது என்பதை அரசாங்கம் உணர்ந்திருப்பதை அறியலாம்.
>
> மதுவிலக்கைத் தமிழக அரசாங்கமும் மீறிவிட்டதால், இப்போது காந்திஜி பிறந்த குஜராத் ராஜ்யம் ஒன்று மட்டுமே மதுவிலக்கை அநுஷ்டிக்கும் தனிப் பெருமை பெற்றுள்ளது. காந்திஜியின் அபிமானக் கொள்கையைப் பின்பற்றுவதோடு அரசியல் சாஸனத்தின் நான்காம் அத்தியாயம் விதிக்கும் கட்டளையையும் குஜராத் பின்பற்றுகிறது. அரசியல் சாஸனத்தின் ஜீவாதார உரிமைகளைக் கூறும் மூன்றும் அத்தியாயத்துக்கும் மேலாக, சர்க்கார் கொள்கைக்கு ஆலோசனை கூறும் நான்காம் அத்தியாயமே முக்கியத்வம் பெற வேண்டும் என்பதுதான் தில்லியில் ஆளும் கட்சியின் விருப்பம். தமிழக ஆளும் கட்சியின் விருப்பமும்கூட இதுவே எனலாம்.
>
> இந்தியாவில் சிறுபான்மையோரே மது அருந்துகிறவர்கள். இப்போது குடிப்பதற்குச் சட்டத்தில் அநுமதி தந்து, மதுவைத் தாராளமாக விற்பனை செய்ய விட்டிருந்தபோதிலும், குடிப்பவர்களின் எண்ணிக்கை பெருகாமல் இருக்க வேண்டும் என்றே அனைவரும் நம்பிக்கையுடன் எதிர்பார்ப்பார்கள்.

எல்லா நன்மக்களும் 'ஹிந்து' கூறுவதைப் போலவே நம்பிக்கை வைப்பார்கள். ஆயினும் பிரத்தியட்சத்தில் நடைபெறுவதைப் பார்த்தால் தில்லி போன்ற பெரிய நகரங்களில் சர்க்கார் சிப்பந்திகளும், தொழிற்சாலை ஊழியர்களும் பெறுகிற சம்பள உயர்வு அனைத்தும் மதுபானத்திலேயே வீணாவதைக் காண்போம்!

## பாகிஸ்தானா, செஞ்சீனமா?

ஒரே சமயத்தில் இரண்டு முக்காலிகளின் மேல் அமரப் பார்ப்பது சௌகரியமல்ல. அது ஆபத்தாகவும் முடியும். இந்திய — ரஷிய உடன்படிக்கை ஏற்பட்டு விட்டபின் செஞ்சீனத்துடன் இந்தியா புதிதாக உறவு கொண்டாட இடமேயில்லை. ஒன்றுடொன்று முரணான விஷயங்களைக் கொண்டு நாம் வாழ முடியாது. அனைவரிடமும் நல்லெண்ணம் பாராட்டுவது நல்லதுதான்; ஆயினும் இது அனைவராலும் ரசித்துக் கொள்ள முடியாத கனவாகவே இன்னமும் உள்ளது. முதலில் பாகிஸ்தானை நட்புக் கொள்ள முயலுவோம். அந்த அம்சத்தில் நமது விவேகத்தையும், நேர்மையையும், சாமர்த்தியத்தையும் காட்டுவோம். இதில் வெற்றி பெற்றால் உடனேயே இன்றிருப்பது போல் மும்மடங்கு பலசாலிகளாகி விடுவோம். அதோடு உலக நாடுகளின் நன்மதிப்பையும் பெறுவோம். இங்கு நான் தத்துவோபதேசம் செய்யவில்லை, உண்மையான அரசியலே பேசுகிறேன்.

## பயமும் பக்தியும்

'ஆண்டவனுக்குப் பயந்து நடப்பது' என்று பொதுவில் சொல்கிறோம். இங்கு 'பயம்' என்பது ஒரு கொடுங்கோல் மன்னனிடம் கொண்டுள்ள பயம் போன்றது அல்ல. ஆண்டவனிடம் பயப்படுவது என்றால் பாபம் செய்ய அஞ்சுவது என்றே பொருளாகும். மதம் விதிக்கும் கட்டளைகளை முறித்துவிடப் போகிறோமே என்று பயந்து வாழ்வதே கடவுளிடம் காட்

## மதுவும் சாஸனமும்

மத்திய சர்க்காரிடமிருந்து ஒப்புதல் பெறாமலே தமிழக அரசாங்கம் மதுவிலக்கை நிறுத்தி வைத்து அவசரப் பிரகடனம் செய்திருப்பதற்குக் காரணம் கூறுமாறு தமிழ்நாட்டு அரசாங்கத்தைத் தில்லி கேட்டிருக்கிறது.

அரசாங்கக் கொள்கைகள் எப்படி அமைய வேண்டும் என்று அரசியல் சாஸனம் ஆலோசனை கூறும் விதிகளில் (Directive principles) மதுவிலக்கை அமுல்படுத்த வேண்டும் என்பதும் ஒன்றாகும். எனவே, மதுவிலக்கை ரத்து செய்வதற்கு ஒப்புதல் தருவது யுக்தமாகுமா என்ற பெரிய பிரச்னை மத்திய சர்க்காருக்கு ஏற்பட்டிருக்கிறது. தில்லி மந்திரி சபையின் அரசியல் நடப்புக் குழுவின் கூட்டத்தில் தமிழக அரசாங்கத்தின் அவசரப் பிரகடனம் விவாதத்துக்கு வந்ததாகத் தெரிகிறது. இது மிகவும் முக்கியமான விஷயமாதலால் இதைவிடப் பெரிய ஒரு குழு பிரச்னையை விவாதிக்கவேண்டுமெனப் பிரதமர் கருதியதாகத் தெரிகிறது. ராஜ்ய முதன் மந்திரிகள் அனைவரையும் கூட்டி மதுவிலக்குக் கொள்கையைப் பூரணமாக விவாதிக்க விரைவிலேயே ஒரு வாய்ப்பைப் பிரதமர் ஏற்படுத்துவார் என்று விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

தில்லி - யு. என். ஐ. 31-8-71.

டும் அச்சம். இந்த அர்த்தத்தில் இந்திய ஏழை மக்கள் பொதுவாக ஆண்டவனிடம் பயந்தே வாழ்கிறார்கள் எனலாம். இதே போல் ஹிந்துக்களில் உயர் வர்க்கத்தினரைப் பற்றிச் சொல்ல முடியுமா என்று தயங்குகிறேன். உயர் மட்டங்களில் இருப்பவர்களிடம் லௌகிக சாமர்த்தியம் நிறைய இருக்கிறது; அந்த அளவுக்குப் பாபத்தைக் கண்டால் அவர்களுக்கு அச்சம் இல்லை. தீயவழியை விட்டு நேர் பாதையிலேயே உயர் வர்க்கத்தினர் சென்றால், தேசிய வாழ்வு, தனிவாழ்வு அனைத்தும் பாறுங்கல்லை அஸ்திவாரமாகக் கொண்டது போல் வெகு உறுதியாக அமைந்துவிடும். நம் எல்லோருக்குமே இந்த இலட்சியத்தில் ஆசை இருக்கிறது. ஆனாலும் அறிவீனத்தால் சத்தியத்தை ஏய்த்து விட்டுக் குறுக்கு வழியில் இலட்சியத்தை அடைய எண்ணுகிறோம். இப்போதுள்ள நெருக்கடியில் உயர் மக்களை நல்வழிப் படுத்துவதே அத்தியாவசியம். மற்ற விஷயங்கள் யாவும் இதைச் சார்ந்ததே.

## நேர்மை வேண்டும்

என்னைப் பார்க்க வருகிற அனைவரும் தேசத்தின் எதிர்காலம் பற்றிக் கவலை தெரிவித்து வருகிறார்கள். அவர்களுடைய அச்சத்தில் நானும் பங்கு கொள்கிறேன். ஆயினும் அவர்களுக்கு ஒன்று சொல்வேன். அவரவரும் தங்கள் சொந்த விஷயங்களில் நேர்மையோடு நடந்தால், இரக்கத்துக்கு உரியவர்களிடம் இரக்கம் காட்டி நடந்தால், பகவானிடம் உண்மையாக விசுவாசம் வைத்து வாழ்க்கை நடத்தினால், இன்றைவிட நல்ல எதிர்காலம் ஏற்படும் என்று நம்பிக்கை பெறலாம். இப்போது துக்கத்துக்கும், அச்சத்துக்கும் நிறையக் காரணம் இருந்த போதிலும், அவரவரும் நல்ல வாழ்க்கை நடத்தி, பகவானைப் பிரார்த்தித்து வந்தால் தேசத்தின் எதிர்காலத்தில் நம்பிக்கை பிறக்கும்.







விலைவாசி உயர்ந்துவிட்டதாக நினைக்காதீர்கள்.
காகித ரூபாயின் மதிப்புக் குறைந்து விட்டது, அவ்வளவுதான்!



# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்-
திருந்தும், அதனால்
நுண்ணிய கிருமிகளிட
மிருந்தும் உங்களுக்கும்,
மற்றவர்களுக்கும் ஏற்படும்
சங்கடத்திலிருந்தும் பாது
காப் பளிக்கிறது.
ஜி-11 (ஹெக்ஸாக்ளோ-
ரோஃபீன்) கலந்த
**சிந்தால் டாய்லெட் பவுடர்**
இந்தப் பாதுகாப்பைத்
தருகிறது. அதோடு...
அன்றலர்ந்த மலரின்
நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்—**
**துர்நாற்றத்தை அறவே
போக்கிப் பாதுகாப்பளிக்
கும் டாய்லெட் பவுடர்.**

Interpub/GP/5 Tam




அமரர் கல்கி

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## எதிர்பாராத சந்திப்பு

**சு**வாமியார் கடிதத்தைப் படித்து விட்டு மகுடபதியிடம் கொடுத்தார். மகுடபதி படித்தான். கடிதத்தில் பின்வருமாறு எழுதியிருந்தது:

> நான் ஒரு அனாதைப் பெண். இங்கே என்னைப் பலவந்தமாகக் கொண்டு வந்து சிறைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். எனக்குப் பைத்தியம் இல்லை. இந்தப் பாதகர்களுடைய கொடுமைக்குப் பயந்து பைத்தியம் மாதிரி வேஷம் போட்டு நடிக்கிறேன். என்னை எப்படியாவது நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்.
>
> இப்படிக்கு,
>
> நீக்கற்ற செந்திரு.

இதைப் படித்ததும் மகுடபதியின் கண்களில் ஜலம் வந்துவிட்டது. பெரியண்ணன், "என்ன? என்ன?" என்று வற்புறுத்திக் கேட்கவே, அவனுக்கும் வாசித்துக் காட்டினான். பெரியண்ணன் 'ஓ' என்று அழுதுவிட்டான்.

சுவாமியார் 'இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தார். "மகுடபதி! இது என்ன? உங்களுக்கு இந்தப் பெண்ணைத் தெரியுமா?" என்று கேட்டார்.

"ஆமாம், சுவாமி! அவளைத் தேடிக் கொண்டுதான் நாங்கள் வந்தோம்.." என்றான் மகுடபதி.

பெரியண்ணன் விம்மிக் கொண்டே, "குழந்தை இந்தக் கடிதத்தைக் கல்லிலே கட்டிக் கீழே போட்டிருக்கிறது. கடுதாசி பறந்து போய் விட்டது. கல் மாத்திரம் சுவாமியின் தலையில் விழுந்திருக்கிறது" என்றான்.

"அப்படியானால், கடிதத்தில் கண்ட விஷயம் உண்மையென்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று சுவாமியார் இரண்டு பேரையும் பார்த்துக் கேட்டார்.

கொஞ்சங் கொஞ்சமாக எல்லா விஷயங்களையும் மகுடபதியும் பெரியண்ணனும் சுவாமியாருக்குச் சொன்னார்கள். சுவாமியார் அளவுகடந்த ஆச்சரியத்துக்கு உள்ளானார் என்று சொல்ல வேண்டியதில்லை. அதோடு அவருக்குக் கொஞ்சம் பயமும் உண்டாயிற்று. கார்க்கோடக் கவுண்டரைப் பற்றி அவர் ஏற்கனவே பராபரியாய்க் கேள்விப்பட்டதுதான். இப்போது அவருடைய கொடுமைகளுக்கு உள்ளானவர்களிடம் நேரிலேயே விஷயங்களைக் கேட்டதும், "அவ்வளவு பொல்லாத மனுஷனுடைய விரோதத்துக்குப் பாத்திரமாகி இந்த ஊரில் மடம் எப்படி நடத்த முடியும்? நம்முடைய தொண்டுகளுக்கெல்லாம் விக்கினம் வந்துவிடும்போலிருக்கே?" என்று நினைத்தார். அதோடு, காங்கிரஸ் தொண்டனான மகுடபதி இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டிருப்பதனால் அபாயம் அதிகமாயிற்று. சர்க்கார் அதிகாரிகள் கார்க்கோடக் கவுண்டரின் பக்கந்தான் இருப்பார்கள். நம்முடைய பேச்சை நம்ப மாட்டார்கள். இவ்வளவுடன்கூட, சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பது ஒரு பெண்; நாமோ சந்நியாசி. பழி சுமத்த எங்கே இடுக்குக் கிடைக்கும் என்று பார்த்துக் கொண்டிருக்கும் தூர்த்தர்கள் தங்கள் காரியத்தை ஒரு வேளை ஆரம்பிக்கலாம்.

இப்படியெல்லாம் இருந்த போதிலும், ஓர் அனாதைப் பெண்ணைப் பாவிகளின் கொடுமையிலிருந்து காப்பாற்ற வேண்டியது அவசியந்தான் என்று சுவாமியார் முடிவு செய்தார். ஆனால் காரியம் கெட்டுப் போகாமல் இருக்க வேண்டுமானால், ரொம்பவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டியதும் அவசியம். அவசரப்பட்டு ஒன்று கிடக்க ஒன்றைச் செய்து மோசம் போகக் கூடாது.

வெகுநேரம் மகுடபதியுடனும், பெரியண்ணனுடனும் கலந்து யோசித்த பிறகு, சுவாமியார் சொன்னதாவது:

"இந்த விஷயத்தில் நீங்கள் ஒன்றும் பிரவேசிக்க வேண்டாம். நீங்கள் தலையிட்டால் கட்டாயம் காரியம் கெட்டுப் போகும். இன்று ராத்திரி இங்கே தங்கிவிட்டு நாளைக்குக் கோயமுத்தூருக்கோ, அல்லது கிராமத்துக்கோ புறப்பட்டுப் போங்கள். உதகமண்டலத்தில் ஒரு பெரிய உத்தியோகஸ்தரை எனக்கு

நல்ல பழக்கமுண்டு. நாளைய தினம் எனக்கும் கொஞ்சம் உடம்பு சௌகரியமாகி விடும். நானே நேரில் போய் அவருடன் பேசி எப்படியாவது அந்தப் பெண்ணை விடுதலை செய்யப் பார்க்கிறேன். அதற்கு இந்தக் கடிதமே எனக்குப் போதும். அவசரப்பட்டு ஏதாவது செய்தோமானால் எல்லாம் குட்டிச் சுவராகிவிடும். அந்தப் பெண்ணுக்கு



ஏதாவது நேர்ந்து விட்டால், அதன் பொறுப்பு நம்முடைய தலையில்தான் விடியும். கார்க்கோடக் கவுண்டரிடத்திலிருந்து அவளை விடுதலை செய்து விட்டால், அப்புறம் அவளாச்சு, நீயாச்சு!''

சுவாமியார் கூறியதை மறுத்துக் கூற மகுடபதிக்குத் தைரியம் உண்டாகவில்லை. அவர் கூறுவதுதான் நியாயம், புத்திசாலித்தனம் என்றும் அவனுக்குப் பட்டது.

''சரி, சுவாமி ! அப்படியே ஆகட்டும்'' என்றான்.

''இனிமேலாவது நீங்கள் கொஞ்சம் பிரசாதம் எடுத்துக் கொண்டு சிரமபரிகாரம் செய்து கொள்ளுங்கள். ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறீர்கள்'' என்றார் சுவாமியார்.

அவ்விதமே மகுடபதியும் பெரியண்ணனும் சுவாமியாரின் அறையிலிருந்து வெளிவந்து பிரசாதம் சாப்பிட்டார்கள். பிறகு மகுடபதி, கிருஷ்ணன் என்கிற பையனிடம் தேவகிரி எஸ்டேட் பங்களா எங்கே இருக்கிறதென்பதைப் பற்றியும், போகும் வழியைப் பற்றியும் விவரமாக விசாரித்துக் கொண்டான். சற்று நேரத்துக்கெல்லாம் பெரியண்ணனைப் பார்த்து, ''பாட்டா! என்னால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. நான் போய்க் கொஞ்சம் ஊர் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன், நீ படுத்துக் கொண்டிரு'' என்று சொல்லி விட்டுப் போனான்.

அவன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் பெரியண்ணன் கிருஷ்ணனிடம், ''தம்பி! எனக்கு இங்கே ஒருவரைப் பார்க்க வேண்டும். போய்ப் பார்த்து விட்டு வருகிறேன். சுவாமியார் கேட்டால் இரண்டு பேரும் ஊர் சுற்றிப் பார்க்கப் போயிருக்கிறோம் என்று சொல்லி விடு'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினான்.

சுவாமியார் சொன்ன யோசனை சரியானது என்று மகுடபதி ஒப்புக் கொண்ட போதிலும், செந்திருவைப் பார்க்காமல் திரும்ப அவன் மனம் ஒப்பவில்லை. உலகத்தைத் துறந்த சுவாமியாருக்கு மகுடபதியின் உள்ளம் செந்திருவைப் பார்க்க எப்படித் துடித்தது என்பது தெரிவதற்கும் நியாயமில்லை. ஆகவே, அவரிடம் சொல்லாமல் எப்படியும் தேவகிரி எஸ்டேட் பங்களாவுக்குப் போய் அவளை ஒரு தடவை கண்ணால் பார்த்துவிட்டாவது திரும்ப வேண்டும் என்று அவன் தீர்மானித்துக் கொண்டான். கவுண்டர்கள் நேற்றுத்தான் வந்து விட்டுத் திரும்பியிருக்கிறார்கள். ஆகையால் இன்று இங்கே இருக்க மாட்டார்கள். பங்களாவுக்கு வெளித் தோட்டத்தில் அவள் வந்து உலாவுகிறாள் என்றும் தெரிகிறது. ஆகவே, அவளைப் பார்ப்பது சாத்தியந்தான். ''பயப்படாதே! நான் இருக்கிறேன்'' என்று இரண்டு வார்த்தை சொல்லுவதுகூடச் சாத்தியமாகலாம். ஏன் முடியாது? இந்த நோக்கத்துடன் தான் மகுடபதி இப்போது உதகமண்டலம் போகும் மலைச்சாலையில் போய்க் கொண்டிருந்தான்.

போகும்போது அவன் உள்ளத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றின. செந்திரு உண்மையிலேயே அங்கே இருப்பாளா? நாம் பார்ப்போமா? அவளை விடுதலை செய்வதற்குச் சுவாமியாரின் முயற்சியையே நம்பியிருக்க வேண்டியதுதானா? வேறு வழியில்லையா? — ஆகா ! என்ன சமர்த்து அவள்? எப்பொழுதோ தோழியிடம் பேசின ஞாபகத்தை வைத்துக்கொண்டு பைத்தியம் போல் நடிக்கிறாளே?—''எல்லாம் என் பேரில் உள்ள அன்பினால் தானே?'' என்று எண்ணியபோது

மகுடபதிக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. அத்தகைய அன்புக்குப் பாத்திரமாக நாம் என்ன செய்திருக்கிறோம்? எத்தனையோ நாவல்கள் படித்திருக்கிறோமே? இம்மாதிரிச் சந்தர்ப்பத்தில் உபயோகப்படக் கூடிய யுக்தி ஒன்றும் இப்போது ஞாபகத்துக்கு வரவில்லையே? தோட்டக்காரனிடம் ஏதாவது சொல்லிச் சிநேகம் செய்து கொண்டு பங்களாவுக்குள் போய் அவனைத் திடீரென்று ஓர் அறையில் தள்ளிப் பூட்டிவிட்டால் என்ன? செந்திருவை அழைத்துக் கொண்டு நேரே ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் ரயிலேறிச் சென்னைக்குப் போய் விடலாமா? — ஆகா! செந்திருவைப் போல் ஒரு வாழ்க்கைத் துணைவி மட்டுமிருந்தால், எப்படி எப்படியெல்லாம் தேசத் தொண்டும், சமூகத் தொண்டும் செய்யலாம் என்று மகுடபதி மனோராஜ்யம் செய்து கொண்டே நடந்தான். இதனால் வழி நடக்கும் களைப்பே அவனுக்குத் தெரியவில்லை. கிருஷ்ணன் சொன்ன அடையாளப்படி, சற்றுத் தூரத்தில் ஒரு மேடான இடத்தில் பங்களா தெரிந்ததுந்தான் அவனுக்கு இப்போதைய நிலைமை ஞாபகம் வந்தது.

பங்களா அருகில் தயங்கித் தயங்கிப் போய் முன்புறத் தோட்டத்தில் செந்திருவைப் பார்க்கும் ஆவலுடன் கண் கொட்டாமல் பார்த்தான். ஆனால், பங்களாவிலோ, தோட்டத்திலோ மனித சஞ்சாரம் இருப்பதாகவே தெரியவில்லை. சற்று நேரம் கழித்து இன்னும் சமீபத்தில் சென்றான். இந்தப் பங்களாதானா, அல்லது தவறான இடத்துக்கு வந்து விட்டோமா என்று அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. தோட்டத்தின் முன் கேட்டுக்கு அருகில் தைரியமாய்ப் போனான். கேட்டின் கதவு திறந்து கிடந்தது. ''சரி, இந்த வீடு இல்லை'' என்று அவனுக்கு நிச்சயமாயிற்று. ஆயினும் உள்ளே போய் யாராவது இருந்தால் அவர்களை விசாரிக்கலாம் என்று போனான். பங்களா முகப்புக்கு அவன் வந்தபோது, கதவைத் திறந்து கொண்டு ஒரு மனிதன் வெளியே வந்தான். அவனைப் பார்க்கப் பயங்கரமாயிருந்தது. முரட்டு மனிதனாகக் காணப்பட்

டான். ஒரு வேளை இந்தப் பங்களா தானே, இவன்தான் அந்த முரட்டுத் தோட்டக்காரனே என்று தோன்றியது. படபடவென்று நெஞ்சு அடித்துக் கொண்டது.

''யார் ஐயா நீ!'' என்று அந்த மனிதன் கேட்டதற்கு, மருடபதி சரியான பதில் சொல்லாமல், ''இது யார் பங்களா அப்பா? வீட்டில் ஒருவரும் இல்லையோ ?'' என்றான்.

'' ஒருவரும் இல்லாமல் என்ன ? உனக்கு யார் வேணும் ?'' என்று எரிந்து விழுந்தான் அம்மனிதன்.

'' வீட்டு எஜமானனைப் பார்க்கணும் '' என்றான் மருடபதி, தடுமாற்றத்துடன்.

'' உள்ளே இருக்கார் போ !''

இந்தப் பங்களா இல்லையென்று மருடபதிக்கு உறுதியாயிற்று. இருந்தாலும் இவ்வளவு தூரம் விசாரித்து விட்டு, உள்ளே போகாமல் திரும்பக் கூடாது என்று நினைத்தான். வீட்டு எஜமானனிடம் என்ன கேட்பது என்று நினைத்துக் கொண்டே வாசற்படியில் நுழைந்து நடையில் போனான். நடையின் வலது புறத்தில் ஒரு வாசற்படி இருந்தது. அதன் அருகில் அவன் போனதும் வெளி வாசற் கதவு படீரென்று சாத்திய சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அதே சமயத்தில் அறைக்குள்ளேயிருந்து, '' வாடா, அப்பா, வா !'' என்று ஒரு தெரிந்த குரல்—பயங்கரமான குரல் — கேட்டது. மருடபதி திகிலுடன் அறைக்குள் நோக்கினான். அங்கே, கையில் சுழல் துப்பாக்கியுடன் கள்ளிப்பட்டிக் கார்க்கோடக் கவுண்டர் நின்று கொண்டிருந்தார்! (தொடரும்)

## தெய்வமாக்கலை

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் சீர் தூக்கிப் பார்க்கும்போது அவற்றுள் நடனக்கலை நடுநாயகமாக விளங்குவதைக் காணலாம். காரணம், அதில் பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்றும் சேர்ந்து வெளிப்படுவதால் கண்ணுக்கும், கருத்துக்கும், செவிக்கும் ஒரே சமயத்தில் விருந்தளிக்கப் படுகிறது. இந்தத் தெய்வமாக்கலையைப் பயின்று தேர்ச்சியடைந்து பேபி கௌஸல்யா, பேபி வித்யா இருவரும் 25-8-71 அன்று மியூஸிக் அகாடமி ஹாலில் பரத நாட்டிய விருந்தளித்தார்கள். இது அவர்களது அரங்கேற்ற நடனம்.



இக்குழந்தைகளுக்குப் பயிற்சி அளித்தவர் பத்மஸ்ரீ கே. என். தண்டாயுதபாணி பிள்ளை. சுமார் ஒன்றரை ஆண்டுக் காலம் இந்தக் கலை மேதையிடம் பயிற்சி பெற்ற குழந்தைகள் அரங்கேற்ற நடனத்தை மிக உயர்வாகச் செய்ததில் வியப்பில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் மாணவக் குழந்தைகளின் உழைப்பின் உயர்வையும் காண முடிந்தது.

சகோதரிகளின் நடனத்தில் அழகு உணர்ச்சி, ரஸ பாவம், அடவு வகைகள், முத்திரைகள், தாளக்கட்டு ஆகிய கலை நுணுக்கங்கள் அற்புதமாய் மிளிர்ந்தன. லய சுத்தம் என்பது பரத நாட்டியத்தின் அடிப்படைத் தத்துவம். அதுதான் ரஸிகர்களை மெய் மறக்கச் செய்து ஆனந்த அநுபவத்தில் திளைக்கச் செய்கிறது. இவர்கள் இதில் சிறப்புப் பெற்றிருந்தது ரஸிகப் பெருமக்களின் கைகொலியிலிருந்து நன்கு வெளிப்பட்டது.

அன்று பத்மபூஷண் எம். எல். வஸந்த குமாரி அவர்கள் பதங்கள் பாடினார்.

மோகனத்தில், ''ஏன் பள்ளி கொண்டீர் ஐயா'' என்ற ராம நாடகக் கீர்த்தனை கம்பீரமாயெழுந்தது; குழந்தைகளின் அபிநயம் ரஸிகர்களைப் பிரமிக்க வைத்தது. குழந்தைகளின் பாத வேலைகள், இருப்புகள் யாவும் அவர்கள் பெற்றிருக்கும் நல்ல பயிற்சிக்குச் சான்று பகர்ந்தன. ஆபோகியில் பிறந்த ''மீனாட்சி தாயே!'' என்ற பதம் மிக உருக்கமாக அமைந்தது.

பேபி கௌசல்யாவும், பேபி வித்யாவும் ஸ்ரீ வி. வைத்திய சுப்பிரமணிய ஐயர் அவர்களின் அருமைப் பேத்திகள். பரத நாட்டிய அரங்கேற்றத்துக்குத் தலைமை வகித்த சென்னை உயர் நீதி மன்றத்து முன்னாள் நீதிபதி டாக்டர் பி. வி. ராஜமன்னார் அவர்கள் குழந்தைகளின் நடனத்தைச் சிறப்பித்துப் பேசினார். செட்டி நாட்டு வேந்தர் ராஜா ஸர் முத்தையா செட்டியார் குழந்தைகளை ஆசிர்வதித்துப் பேசினார்.

— காந்தன்

## ரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து ...




# ட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

ற்ற எந்த பவுடரையும்விட.

**தோ, எப்படி என்று பாருங்கள்:**

ட் டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட கொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.

ட் அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது; துணிகள் அதிக சுத்தமாகின்றன: சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.

ட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்

SHILPI HPMA 38A/70 TAM

# கல்வி முறையின் கோளாறு



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

கல்வியின் முதல் பிரயோஜனமாக விநயம் ஏற்பட வேண்டும். பழைய நாளில் மாணவனுக்கு 'விநேயன்' என்றே பெயர் இருந்தது. அடக்கம் இல்லாத படிப்பு, படிப்பே ஆகாது. தன்னைத்தானே அடக்கிக்கொள்ளும்படியான நல்ல குணம் முதலில் வரவேண்டும். ஆனால், நடைமுறையிலோ படிப்பு இல்லாத மலைச் சாதி மக்களிடையே, நாகரிகம் இல்லாத ஜனங்களிடத்திலே கெட்ட குணங்கள் அதிகம் இருப்பதாகக் காணவில்லை. அங்கே மாஜிஸ்டிரேட் கோர்ட்டு, ஹைகோர்ட்டு முதலியவை இல்லை; குற்றங்கள் இல்லை. நிறைய ஹைஸ்கூல், காலேஜ், யுனிவர்ஸிடி முதலியன எல்லாம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போகிற இடங்களில்தான் கோர்ட்டு வழக்குகள், கிரிமினல் குற்றங்கள், ஏமாற்று வித்தை, ஜேப்படித் திருட்டு முதலியவை அதிகமாகிக் கொண்டிருக்கின்றன.

கல்வியின் பயன் மெய்யான பொருளாகிய ஆண்டவனைத் தெரிந்து கொள்வதுதான். ஆனால் இந்தக் காலத்தில் படிக்கிறவர்களுக்குத் தெய்வ பக்தியே இருப்பதில்லையே.

இது வேடிக்கையாக இருக்கிறதல்லவா? படித்ததன் பிரயோஜனம் நல்ல குணம்; அடக்கம். ஆனால் இப்போது நாட்டில் முன்னைவிட நிறையப் படிப்பு இருக்கிறது; ஹைஸ்கூலில் இடம் இல்லாமல், 'ஷிப்டு' வைத்து வகுப்பு நடத்துகிறார்கள். இவ்வளவு இருந்தும் படிப்பின் பிரயோஜனமான விநயம் ஏற்படவில்லை. அதற்கு நேர் விரோதமான குணம் அல்லவா வளர்கிறது? படிக்கிற பையன்கள் இருக்கிற இடத்துக்குத்தான் போலீஸ், மிலிடெரி எல்லாம் அடிக்கடி வர வேண்டியிருக்கிறது.

நம் தேசப் பெண்களின் இயற்கையான குணம் அடக்கம். படிக்கிற பெண்களுக்கு ஸ்வபாவமான அடக்க குணத்தோடு, கல்வியின் பிரயோஜனமாகப் பின்னும் அதிக அடக்கம் வளர வேண்டும். ஆனால், ஸ்வபாவமாக அடங்கி நல்லவர்களாக உள்ள பெண்களின் குணத்தையுமல்லவா இந்தக் கல்வி போக்கி விட்டது? குணத்தைக் **கொடுக்கும்**படியான படிப்பு, குணத்தைக் **கெடுக்கும்**படியாக இருக்கிறதே! ஏன்?

இதற்கெல்லாம் காரணம் என்ன என்பதை நாம் கொஞ்சம் ஆலோசித்துப் பார்ப்போம்.

'படிப்பு என்றால் எப்படி இருக்க வேண்டும்? எப்படிப் படிக்க வேண்டும்? சிஷ்யர்கள் எப்படி இருக்க வேண்டும்? ஆசாரியர்கள் எப்படி இருக்க வேண்டும்?' என்பவற்றை எல்லாம் விளக்கிச் சொல்கிற தர்ம சாஸ்திரம் இருக்கிறது. அதில் 'இளமையிற் கல்' என்று சொல்லியிருக்கிறது. அதுவே பிரம்மசரிய ஆசிரமம். ஒருவனுக்கு விவாகம் ஆவதற்கு முந்தி, விவரம் தெரிந்த பிறகு இருக்கக்கூடிய காலம். அதற்குள் படிக்க வேண்டும். ஒரு குருவினிடத்தில் போய்ப் படிக்க வேண்டும் என்பது சாஸ்திரம். சிஷ்யன் பிச்சை எடுத்து வந்து குருவுக்குத் தருவான். பிச்சை எடுப்பதால் அவனுக்கு அகங்காரம் கரைந்து விநயம் ஏற்பட்டது. ஆசிரியருடனேயே வசித்ததால் அவரிடம் உண்மையான பிரியம் ஏற்பட்டது. அவருக்கும் இவனிடம் பிரியம் இருந்தது.

சிஷ்யர்களைக் கூடவே வைத்துக் கொண்டிருந்த குரு அவர்களுடைய மரியாதையைப் பெறுகிற விதத்தில் நல்ல ஒழுக்கங்களுடனேயே வாழ வேண்டியதாயிற்று. அவரிடம் இயல்பாகவே மாணவனுக்கு பக்தி உண்டாயிற்று.

முன்பு நம் மாணவர்களுக்கு இருந்த குரு பக்தி என்பதே இப்போது அடியோடு போய் விட்டது. பையன் வாத்தியாரைப் பார்த்து, 'கேள்வித் தாளையே கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அடிக்கிறேன்' என்று சொல்லக்கூடிய நிலைமை வந்துவிட்டது.

முன்பு இருந்த கல்விதான் இப்போதும் இருக்கிறது. கல்வியில் மாறுதல் இல்லை. ஆனால் முறை மாறிவிட்டது. மருந்து ஒன்றாகவே இருக்கலாம். பத்தியம் மாறிவிட்டால் மருந்தே விஷமாகி விடும் என்பது போல ஆகிவிட்டது இது.

'சர்க்காவில் நூற்க வேண்டும்; கைக்குத்தல் அரிசியைத்தான் சாப்பிட வேண்டும்' என்றால் எல்லாராலும் அதைப் பின்பற்ற முடியவில்லை. ஆனாலும் இரண்டொருவர் இப்படி இருக்கத்தான் இருக்கிறார்கள். 'நான் கதர்தான் உடுத்திக்கொள்வது', 'நான் கைக்குத்தல் அரிசிதான் சாப்பிடுவது' என்று சொல்கிறவர்களைப் பார்க்கிறோம். அதுபோலவே 'குருகுலப் படிப்புத்தான் வேண்டும்' என்று சொன்னால் அது இந்தக் காலத்தில் சிரமந்தான். இம் முறையைப் பூரணமாகக் கொண்டு வர முடியும் என்ற நம்பிக்கையில் நான் சொல்லவில்லை. அப்படி வந்துவிட்டால் நல்லதுதான். ஆனாலும் இதுமாதிரியான ஒரு முறை இந்த நாட்டில் இருக்கிறது என்பதே தெரியாமல் அடியோடு அழிந்துபோக விடக் கூடாது அல்லவா? மியூஸியத்தில் வைக்கிற மாதிரியாவது 'நான் குருகுலவாசம் செய்து படித்தேன்' என்று வருங்காலத்தில் சொல்லிக் கொள்வதற்காகவாவது பத்துப் பேர்கள் அப்படிப் படிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். விதை முதலையாவது ரக்ஷிக்க வேண்டும்.



பகல் முழுதும்
கடினமான வேலைக்குப் பிறகு...



புத்துயிரளிக்கும்
நெஸ்கா:பே ஒரு கப்
அருந்துங்கள்
—5 செகண்டில் தயார்!

5
செகண்டில்
தயார்

முற்றிலும் சுத்தமான காப்பி—தென்னிந்திய
காப்பி விதைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது

# நெஸ்கா:பே

உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே
ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே!




ஒரு நெஸ்லே தயாரிப்பு

NCE 6309



# சென்ட்ரல்

பி.வி.ஆர்

சென்ட்ரல் ஸ்டேஷன் சூபரின்டென்டுக்குக் குவார்ட்டர்ஸ் ஸ்டேஷன் மாடியிலேயே உள்ளது. எல்லா வசதிகளையும் கொண்ட வீட்டில் ஏழு அறைகள் உள்ளன. - போய்ப் பார்த்த ஒருவர்.

## அத்தியாயம் 6

மாமா ஜம்புநாதனும் கேதாரமும் திடுக்கிட்டுப் பார்த்தனர். ஒரு பத்து வயதுப் பெண்ணுக்கு இரண்டாம் நம்பர் ரிடயரிங் அறையில் என்ன வேலை இருக்க முடியும் என்று மாமா தீவிரமாக யோசனை செய்தார்.

''யார் அம்மா வேணும், உனக்கு?'' கேதாரம் எழுந்து அந்தப் பெண்ணின் அருகே வந்தான்.

''நீங்கதானே கேதாரம்?''

''ஆமாம்.''

''பம்பாயிலிருந்துவந்திருக்கிறீர்கள்?''

''ஆமாம்.''

''ரேணுகா தந்த சாக்லேட்டைப் பாபுகிட்டே கொடுத்தீர்கள்?''

''ஆமாம், ஆமாம். நீ யாரு?''

''என் பேரு அனு. என் அக்கா இந்தச் சீட்டை உங்ககிட்டே கொடுக்கச் சொன்னாள்!''

அனு நீட்டிய ஒரு சின்னஞ் சிறு காகிதத்தை வாங்கிப் பார்த்தான். அதில், ''ரேணுகா தங்கள் வசம் கொடுத்தனுப்பிய சாக்லேட் கிடைக்கப் பெற்றது. பாபு, தன்மீது உங்களுக்கு நம்பிக்கை விழவில்லை என்று குறைப்பட்டுக் கொண்டதால் இதை எழுதும்படி நேரிட்டது.

இப்படிக்கு, — மங்களா''

என்று எழுதி யிருந்தது.

''நீ அவள் தங்கையா?''

''ஆமாம். நான் வரேன்.''

''உன் அக்கா எங்கே இருக்கிறாள்?''

''வேலைக்குப் போய் விட்டாள்.''



"எப்போ திரும்பி வருவான்?"

"இரண்டு மணிக்கு. இப்போது 'என்கொயரி'யில் இருப்பான்" என்று சொல்லி விட்டு அவள் ஓடோடிச் சென்றுள்.

"யாருடா, இந்தப் பொண்ணு?"

"ஸ்டேஷன் சூபரிண்டெண்டின் பெண், மாமா."

"கடிதாசு எழுதி அனுப்பியிருக்கிறளே, அவள்?"

"இந்தப் பெண்ணேட அக்கா."



"உனக்கு எதுக்குடா அவள் எழுதணும்? அந்தக் கடிதாசை இப்படிக் கொடு. மத்தியானம் பெண் பார்க்கப் போகணும். கார்த்தாலேயே ஒரு சிநேகமா?"

"உளறுதீர்கள், மாமா... இந்தாருங்கள், கடிதாசை நீங்களே படித்துப் பாருங்கள்."

எதையோ எதிர்பார்த்து, அதற்கு ஆயத்தமாக இருந்த ஜம்புநாதன் கடிதத்தைப் படித்தார். அவருக்குச் சுவாரசியம் திடீரென்று குறைந்தது.

"பூ! என்னமோ நினைச்சேன். இந்த எஸ்.எஸ்.ஸை எனக்குத் தெரியும்டா! கணபதின்னு பேரு. பூர்விகம் நங்கவரம். திரும்பிப் போறப்போ பார்த்துட்டுப் போறேன்.... அந்தக் காலத்திலே பொன்மலையிலே ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தான். வேலையிலே படுசுட்டி. பாவம், அவனுக்கு நிறைய குழந்தைகள்!"

மாமா எழுந்தார்.

"நான் வரேண்டா, கேதாரம்!"

"சரி."

"நீ என்னிக்குத் திரும்பிப் போறேன்னு சொன்னே?"

"சனிக்கிழமை ராத்திரி மெயிலில்."

"ஞாயிற்றுக் கிழமை வந்து சனிக்கிழமை போறியா? ஏழாம் நாள். பாதகம் இல்லே.... ரிசர்வு பண்ணிட்டியா?"

"பம்பாயிலிருந்தே தந்தி கொடுத்து ஏற்பாடு செய்தேன். இப்போ போய்ப் பார்க்கணும்."

"அதைப் பார்த்துட்டுச் சாப்பிடு... ஒரு தூக்கமும் போடு.... நான் இரண்டரைக்கு வரேன். என்ன? வரட்டுமா?"

"சரி."

"பம்பாயிலே உனக்குத் தெரிஞ்சவா ஆயிரம் பேர் இருப்பா... என் ஆசிரமத்தைப் பற்றிச் சொல்லு. ஷண்முகானந்த சபாவில் நாடகம் போட முடியுமான்னு விசாரி...என்ன விசாரிக்கிறியா? இல்லே போனதும் மறந்துடுவியா? அங்கே போட்டால் மூவாயிரம் பேர் உட்கார்ந்து பார்க்கலாமாமே.....? நீ என்ன சொல்லறே?"

"நீங்க போயிட்டு வாருங்கள், மாமா!"

"காருடன் வருவேன். நன்ன டிரஸ் பண்ணிக் கொள்......டெரிலின் இருக்கோ இல்லியோ?"

"எல்லாம் எனக்குத் தெரியும். நீங்கள் போய் வாருங்கள்."

"நான் வரேன். வரட்டுமா?"

கேதாரம் பதில் சொல்லவில்லை. மாமாவும் வெளியேறினர், ஒரு வழியாக.

* * *

ரிடயரிங் ரூமிலிருந்து வெளியே வந்த கேதாரத்துக்கு, மங்களாவின் போக்கு விசித்திரமாகத் தோன்றியது. ரயிலினுள் சந்தித்த போது அவன் ரேணுகா சொல்லி அனுப்பிய விஷயத்தை விவரமாகச் சொன்னன். அதன் பின், சாக்கலேட் பெட்டியை அப்புறம் தன் பெட்டியிலிருந்து எடுத்துத் தருவதாகச் சொன்னன். ரிடயரிங் ரூமுக்கு வந்து வாங்கிக் கொள்ளுவதாகக் கூறி விட்டு மங்களா சென்றுள்.

ஆனால் அவள் வரவில்லை. தம்பியை அனுப்பினள். அதன்பின் கிடைத்த விவரத்துக்கு ஒரு குறிப்பு போல ஒரு காகிதத்தில் எழுதித் தங்கையின் மூலமாகக் கொடுத்து அனுப்பினள். மாமா வந்ததும் வராததுமாகக் கூறின... லிருந்து தம்பியுடன் அவளும் வந்... அறைக்கு வெளியே மாடிப்படி அருகில் நின்று கொண்டிருந்தாள் என்று தெ... கிறது. ஏன் அவளே வரவில்லை...?

காரணம் என்னவாக இருக்கும்? அவனைச் சந்திக்கப் பிடிக்கவில்லையா? சாக்லேட் பெட்டியைக் காரணமாக வைத்து, அவளைத் தான் ரிடயரிங் ரூ... வரை இழுப்பதாக அவள் நினைத்து வி... டாளா? கேதாரம் மெதுவாக மாடிப்படி வழியாக இறங்கி முதல் வகுப்பு டிக்கெட்டுகள் ரிஸர்வ் செய்யும் இடத்துக்கு வந்தான். அவனுடைய கண்கள் பம்பாய் மெயில் எக்ஸ்பிரஸ் கவுண்டரைத் தேடின. என்கொயரி கவுண்டர் போனில் ஒரு பெண் பேசிக்கொண்டிருந்தாள். மங்களா! தன் அவசரத்தையும் ஆத்திரத்தையும் அவளுக்கு...

காட்டிவிடக்கூடாது என்ற உத்தேசத்தோடு, பம்பாய் கவுண்டர் முன்னால் போய் நின்றான். அப்போதுதான் அங்கிருந்து ஒரு பிரயாணி தம் காரியத்தை முடித்துக்கொண்டு சென்றார்.

'' என்ன ஸார் வேணும்?'' என்றார் பம்பாய் கவுண்டர்.

'' சனிக்கிழமை மெயிலில் ரிஸர்வேஷனுக்கு ஏற்பாடு செய்திருந்தேன். கன்ஃபர்மேஷன் இன்னும் வரவில்லை.''

'' இருபத்தெட்டாம் தேதிக்கா?''

'' ஆமாம்!''

பெரிய ரிஜிஸ்தரைப் புரட்டிய கிளார்க், இருபத்தெட்டாம் தேதி வந்ததும், '' பேரு?'' என்று கேட்டார்.

'' கேதாரம். எஸ். கே. கேதாரம்.''

கிளார்க் பெயர்களைப் படித்துக்கொண்டே வந்தவர், திடீரென்று நிறுத்திப் பார்த்து விட்டு, நிமிர்ந்தார்.

அதுவரையில் ரிஜிஸ்தரில் தன் பெயர் இருக்கிறதா என்று கண்களைச் சிரமப்படுத்திக் கொண்டே பார்த்து வந்த கேதாரமும் நிமிர்ந்தான். தன் பெயரை அவனால் பார்க்க முடியவில்லை.



''வெயிட்டிங் லிஸ்ட். எண், இருபத்திரண்டு.....''

'' என்ன?'' என்று கத்தினான் கேதாரம்.

''நீங்க வெயிட்டிங் லிஸ்டிலே இருபத்திரண்டாவதிலே இருக்கீங்க!'' என்றார் கிளார்க் அழுத்தமாக.

கிளார்க்கின் நிதானம் கேதாரத்தின் எரிச்சலைத் தீவிரமாக்கியது.

''எட்டு நாட்களுக்கு முன்னாலேயே தந்தி கொடுத்தாச்சு...''

''இருக்கலாம், ஸார்! ஆனால் அதற்கு முன்னாடியே ரிஸர்வேஷன் முடிஞ்சு போச்சு !''

''எனக்கு ஸீட் கிடைக்க வாய்ப்புண்டா ?''

''வெயிட் பண்ணிப் பாருங்கள்.''

''அது எனக்குத் தெரியும். எனக்கு ரிஸர்வேஷன் வேணும்.''

''இருபத்தொன்பதாம் தேதிக்கு ஒரு பர்த் காலி இருக்கிறது.''

''வேண்டாம்..... இருபது நாள் முன்னாலேதானே ரிஸர்வேஷன் தொடங்கறீங்க?''

''ஆமாம்!''

''நான் பத்து நாட்கள் முன்னாலேயே ரிஸர்வ் பண்ண பம்பாயிலிருந்து தந்தி கொடுக்கச் சொல்லியிருந்தேன். உங்களுக்கு எப்போ தந்தி கிடைச்சது ?''

மீண்டும் ரிஜிஸ்தரைப் பார்த்தார் கிளார்க். பிறகு, ''பதினேழாம் தேதி!'' என்றார்.

''நான் பன்னிரண்டாம் தேதியோ, பதின்மூன்றும் தேதியோ தந்தி கொடுத்தேன்.''

''உங்க கணக்குப் பிரகாரமே பத்து நாட்கள் ஆகவில்லை. தினசரி மூவாயிரம் தந்திகள் வருகின்றன. உங்க தந்தி பதினாறும் தேதி இரவு வந்திருக்கிறது. பதினேழாம் தேதி பதிவு பண்ணியிருக்கிறோம்..... போதுமா...? உங்களுக்குப் பின்னால் இரண்டு மூன்று பேர்கள் நிற்கிறார்கள்.....''

கேதாரத்துக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவன் ஓர் அதிகாரி. அதுவும் ரயில்வேயில் முதல்தர அதிகாரி. அவனுக்கே இடம் இல்லை என்கிறார்கள். இது அநியாயம். அவனைப் போன்ற அதிகாரிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்தபின்தானே மற்றப் பிரயாணிகளுக்கு இவர்கள் ரிஸர்வ் செய்ய வேண்டும் ?

அடுத்த கணமே அவன் தன் நினைப்பும் எண்ணமும் கீழ்த்தரமாகப் போகின்றன என்பதை உணர்ந்தான். அவன் டியூட்டியில் வரவில்லை. பெண் பார்க்க, லீவு எடுத்துக் கொண்டு சர்க்கார் சலுகையுடன் காசு கொடுக்காமல் பிரயாணம் செய்கிறான். எப்படிப் பணம் கொடுத்து வருகிறவர்களைவிட, அதிக உரிமையை எதிர்பார்க்கலாம்?

திடீரென்று என்கொயரி கவுண்டர் நினைவுக்கு வந்தது. பம்பாய் கவுண்டர் அளித்த ஏமாற்றத்துக்குச் சாந்தி கிடைக்க வழி இருக்கிறதா என்று அங்கேதான் தேட வேண்டும்.

மெதுவாக 'என்கொயரி' கௌண்டர் முன்னால் போய் நின்றான்.

''குட்மார்னிங் !''

நிமிர்ந்து பார்த்த மங்களா ஒருகணம் திடுக்கிட்டாள். ''ஓ, நீங்களா! சாக்லேட் பெட்டி கிடைத்தது தாங்க்ஸ்.''

''வரேன்னு சொன்னீர்களே?''

''சொன்னேன். முடியவில்லை.''

''உங்க அப்பாதான் எஸ்.எஸ்.ஸா?''

''ஆமாம்.''

''மிஸ்டர் கணபதியை என் மாமாவுக்குத் தெரியும்.''

''அப்படியா? சந்தோஷம்.''

''பம்பாய் மெயிலில் இருபத்தெட்டாம் தேதிக்கு வெயிட்டிங் லிஸ்டில் போட்டிருக்கிறார்கள்.''

''இடம் இல்லையா?''

''ஊஹூம்... வெயிட்டிங் லிஸ்டில் நம்பர் இருபத்திரண்டு.''

'' பத்து வரையிலும் நிச்சயமாகச் சொல்லலாம். ஏதாவது அதிகமா ரயில் பெட்டிகள் சேர்த்தால் உங்களுக்கும் கிடைக்க வழி இருக்கு.''

''எமர்ஜன்ஸி கோட்டாவில் முயற்சி பண்ணலாம்னு இருக்கேன்.''

''நல்ல யோசனைதான். ஆனால் இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை. நாளை ஆபீஸில்தான் நீங்க முயற்சி பண்ணணும். ஆனால் அது அவசியம்னு தோணலே.''

''ரயில் பெட்டிகள் சேர்ப்பதற்கு நிச்சயம் வழி உண்டா ?''

''பண்ணுவார்கள்.''

''ரேணுகா புதன்கிழமை வருவாள்.''

பேசுகிற விஷயமெல்லாம் தீர்ந்து விட்டதை உணர்ந்தான் கேதாரம்.

'' ஆமாம்... வேறு ஏதாவது விசேஷம் உண்டா?.....''

திடீரென்று பர்ஸின் நினைவு வந்தது.

''இன்னிக்கு வந்ததிலேயிருந்து எல்லாம் அபசகுனமாகவே இருக்கு.''

''ஏன்? என்ன நடந்தது? முதன் முதலில் என்னைத்தானே பார்த்தீர்கள்?''

''அது ஒன்றுதான் நல்ல சகுனம். நீங்கள் அந்தப்புறம் போனீர்கள். இந்தப்புறம் என் பர்ஸ் போச்சு, நாற்பது ரூபாய் சொச்சம்.''

'' அடப் பாவமே!'' என்றவள் ஏதோ ஞாபகம் வந்தவளைப் போல, ''எஸ். எஸ்.ஸிடம் ஒருவன் ஏதோ ஒரு பர்ஸைக் கண்டெடுத்ததாகச் சொல்

விக் கொடுத்து விட்டுப் போனான். விவரத்தை என்னிடமும் சொன்னான். நீங்கள் எஸ். எஸ்.ஸைச் சந்தித்துப் பாருங்கள். ஒரு வேளை அது உங்கள் பர்ஸாக இருக்கலாம்'' என்றாள்.

''யார் அவன்?''

''மணி என்று பேரு. உங்களுக்குத் தெரியாது. ஏதோ டிராவல் ஏஜன்ஸியில் வேலை போலிருக்கிறது.''

''தாங்க்யூ வெரி மச், மங்களா!''

''ஓ, ப்ளீஸ் டோண்ட் மென்ஷன். நாங்கள் ஒத்தாசை செய்யறதுக்காகத் தானே இருக்கோம்?''

தான் பிரயாணி, அவள் ஒரு என்கொயரி கிளார்க் என்பதைச் சுட்டிக் காட்டி விட்டாள் என்று நினைத்தான் கேதாரம். தொடர்பு அவ்வளவுதானா?

ஒரு நிமிஷத்தில் கேதாரம் தனக்குள் அவளை மன்னித்தான். கோபித்துக் கொண்டால், பரிச்சயம் இத்துடன் நின்று விடும் என்ற பயம்.

''ரேணுகா வந்தால் தகவல் சொல்லி அனுப்புகிறீர்களா?''

''அவளும் அது அவசியம் என்று கருதினால் சொல்லி அனுப்புகிறேன்!''

'இப்போது, ஏண்டா இப்படிப் பேசினோம்' என்று தோன்றியது கேதாரத்துக்கு. அவன் தன்னைத் தானே சபித்துக் கொண்டிருக்கையில் மங்களா கேட்டாள். ''உங்களுக்கு ரேணுகாவை ரொம்ப காலமாகத் தெரியுமா?''

''தெரியாது. முப்பது நிமிஷங்கள் ஒருவருக்கொருவர் விக்டோரியா டெர்மினஸில் பார்த்துப் பேசியதுதான்!''

''ஓ, அரை மணி நேரமா?''

அவள் கேட்ட விதமே நையாண்டியாகப்பட்டது. மேலும் அவனுக்கு அங்கே நிற்கப் பிடிக்கவில்லை.

''தாங்க்ஸ். மிஸ் மங்களா!'' என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.

அங்கிருந்து நேரே எஸ். எஸ்.ஸின் அறையை நோக்கி நடந்தான்.

திடீரென்று போர்ட்டர் சினன் வழி மறித்தான்.

''என்ன சாமி, பர்ஸ் கிடைச்சுதா?''

''ஐயாகிட்டே இருக்குன்னு தகவல் கிடைச்சுது. அதுதான் போறேன்.''

''அதிலே பணம் முழுசும் அப்படியே இருக்கும்னு நீ நம்பறியா?''

''போய்ப் பார்த்தால்தான் தெரியும்.....''

''இருக்காது சாமி...., சத்தியமா பர்ஸ்ஸை எடுத்தவன் பணத்தை எடுத்துக்காமக் கொடுக்கமாட்டான். போய்ப் பாரு... போ....''

கேதாரம் எஸ்.எஸ்.ஸின் அறையினுள் நுழைந்தான்.

ஒரு நீண்ட சதுரமான அறை. நீளம் பதினைந்து, அகலம் பத்து என்று கேதாரத்தின் என்ஜினீயர் மூளை அனுமானம் செய்தது. அறையின் நட்ட நடுவே மிகப் பெரிய — அறையின் விஸ்தீரணத்துக்கு ஒவ்வாத — மேஜை அரை வட்ட வடிவில், அப்போதுதான் போடப்பட்ட பிரெஞ்சு பாலிஷில் பிரகாசித்தது. மேஜையின் மேல் இரண்டு கண்ணாடிச் சதுரங்கள். அவற்றின் கீழே நானாவித மான காகிதங்கள். குறிப்புகள். கடிதங்கள். ரயில்வே அறிக்கைகள். இடது கோடியில் மூன்று டெலிபோன்கள்.... ஒன்று சென்ட்ரல் ஸ்டேஷன் டெலிபோன் எக்ஸ்சேஞ்ச்; நகரத்திலுள்ளவர்களுடன் பேச. இன்னொன்று சென்ட்ரல் ஸ்டேஷனில் இருக்கும் மற்ற டெலிபோன்களில் மட்டுமே தொடர்பு கொள்ள. மூன்றாவது என்ன என்று மேற்கத்திய ரயில்வே டிவிஷனல் இன்ஜினீயர் கேதாரத்துக்குத் தெரியும். எல்லா ரயில்வே நிலையங்களுடனும் பேச என்று தனியாக போன்.

எஸ். எஸ். ஏதோ மும்முரமாக எழுத்து வேலையில் ஆழ்ந்திருந்தார். அவர் முன்னால் இரண்டு நாற்காலிகளில் இரண்டு பேர் — வடநாட்டுக்காரர் — உட்கார்ந்து எஸ். எஸ்.ஸின் எழுத்து வேகத்தைப் பார்த்து வியந்து கொண்டிருந்தனர். காலியாக இருந்த மற்ற இரு நாற்காலிகளில் வலது கோடியில் உட்கார்ந்து கொண்டான் கேதாரம்.

எஸ். எஸ். இன்னும் எழுதுவதை நிறுத்தவில்லை. அறை முழுதும் ஒரு நோட்டம் விட்டான் கேதாரம். சுவர்களுக்கு இள நீல நிறத்தில் டிஸ்டெம்பர் அடித்திருந்தது. ஒரு புறம் நேரு. அவர் எதிரே லால்பஹாதூர். 'ஏன் மகாத்மாவின் படத்தை மாட்டவில்லை?' என்று கேதாரம் தனக்குள் கேட்டுக் கொண்டான். ஒரு வேளை மகாத்மா நீதி நிலையங்களில் நீதிபதிக்குப் பின்னால் தான் இருக்க வேண்டுமோ? அல்லது மூன்றாவது வகுப்பிலேயே பிடிவாதத்துடன் பிரயாணம் செய்த அவர், இவ்வளவு அழகான அறையில் காட்சி அளிக்கக் கூடாதோ?

அறையை விட்டு விட்டு மீண்டும் எஸ். எஸ்.ஸைப் பார்த்தான் கேதாரம். தளதளவென்ற பொன்னிற மேனி. நெற்றியில் சந்தனப் பொட்டு. அதன் நடுவே குங்குமம். நடுத் தலையின் வழுக்கை தெரியாவண்ணம், தலையைத் தூக்கி வாரியிருந்தார். ஷெல் பிரேம் கண்ணாடி. தூய வெண்ணிற கோட்டு. ரோஜாப்பூ இருக்க வேண்டிய இடத்தில் வெள்ளைப் பிளாஸ்டிக் ஒரு சிறு கொண்டை ஊசியின் பலத்தில் நின்றது.

பிளாஸ்டிக்கில், 'கணபதி' என்ற அவருடைய பெயர் பொன்னிறத்தில் மிளிர்ந்தது. தோள் பட்டையில் ஓர் இளம் பச்சை பாண்ட். அதன் மேலே அசோக ஸ்தூபியும் சக்கரமும். 'பீக் காப்' மேஜை மேல் டெலிபோனருகே பச்சை வர்ணத்தில் காட்சி அளித்தது.

எழுதி முடித்தவுடன் எஸ். எஸ். கேதாரத்தின் மேல் பார்வையைச் செலுத்தி விட்டு, அவன் எங்கே பேச்சை ஆரம்பித்து விடுவானோ என்ற பயத்துடன் வட இந்தியர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தார்.

''இந்த லெட்டரை நாக்பூர் எஸ். எஸ்.ஸிடம் கொடுங்கள்!''

''தாங்க்ஸ்...'' கடிதத்தை வாங்கிக் கொண்டார் ஒருவர்.

''நாங்கள் தந்தியும் தனியாக அனுப்புகிறோம்.'' — எஸ். எஸ்.

''ரொம்ப தாங்க்ஸ்.'' — ஒருவர் சொல்லி எழ, இன்னொருவர் கூடவே மௌனமாகவே எழுந்தார்.

அவர்கள் இருவரும் வெளியேற ஸ்டேஷன் சூபரின்டெண்டன்ட், கேதாரத்தின் பக்கம் திரும்பினார்.

''குட்மார்னிங் ஸார்!''

''குட்மார்னிங்... உங்களுக்கு என்ன செய்யணும்?''

''நான் கேதாரம். எஸ். கே. கேதாரம்....''

''ஓ, அப்படியா? இன்னிக்குத்தானே பம்பாயிலிருந்து வந்தீர்கள். மங்களா சொன்னாள்.... உங்க மாமாவை எனக்குத் தெரியும் - ஜம்புநாதன்.''

''அவர்கூட இன்னிக்கு உங்களைப் பார்க்கப் போவதாகச் சொன்னாரே?''

''அப்படியா? மெட்ராஸிலா இருக்கிறார்..... இங்கே வரலையே.''

''இனிமேல் வருவாரோ என்னமோ... வந்து... இன்னிக்குக் கார்த்தாலே ரயிலை விட்டு இறங்கியதும் இறங்காததுமா, என் பர்ஸை யாரோ பிக்பாக்கெட் அடித்து விட்டார்கள்.''

''அப்படியா?''

''உங்க பெண் சொன்னா, யாரோ ஒருவர் உங்ககிட்டே ஒரு பர்ஸை ஒப்படைச்சிருப்பதாக.''

''அது ரொம்பப் பழைய பர்ஸ். நான் திறந்துகூடப் பார்க்கவில்லை.''

''என் போட்டோ, குருவாயூரப்பனுடைய படம், மூணு பத்து ரூபாய், இரண்டு அஞ்சு ரூபாய் எல்லாம் இருக்கும். எத்தனை ஒரு ரூபாய் சில்லறைன்னு தான் எனக்கு நினைவு இல்லை.''

''அதனால் என்ன பரவாயில்லை. பழைய பர்ஸாச்சே... அது எப்படி உங்களுடையதாக இருக்க முடியும்னு தான் யோசிச்சேன்.....''

''மாமாவின் இரண்டு கடிதாசுகளும் அதில்தான் இருக்கு.''

மேஜை டிராயரை ஏற்கனவே திறந்துவிட்ட எஸ். எஸ். ஒரு சதுரமான கறுப்பு பர்ஸை எடுத்தார்.

''இதுவேதான். பட்டன் கூடப் போயிருக்கும்.''

அந்தப் பழைய பர்ஸைத் திறந்து பார்க்க விருப்பமில்லாதவரைப் போல, எஸ். எஸ். அவனிடம் நீட்டினார். கேதாரம் அவசரம் அவசரமாய்த் திறந்து பார்த்தான். பிறகு, உற்சாகமே குலைந்து போய், ''சார்! எல்லாம் அப்படியே இருக்கு. பணத்தைத் தான் காணோம்'' என்றான். அதே சமயத்தில் போர்ட்டர் சீனன் உறுதியாகச் சொன்னதும் நினைவுக்கு வந்தது.

''எடுத்தவன் பணத்தை மட்டும் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு, பர்ஸைத் தூக்கி எறிந்திருக்கிறான்.''

எஸ். எஸ். சொல்லி முடிக்கவும், மணி திடீரென்று பிரவேசிக்கவும் சரியாக இருந்தது.

''வா, அப்பா மணி... நல்ல சமயத்தில்தான் வந்திருக்கிறாய். நீ கொடுத்தியே பர்ஸ், அது இவருடையதுதான்!''

''அப்படியா! கங்கிராஜுலேஷன்ஸ்.. மூன்றாவது பிளாட்பாரத்தில் கிடந்தது. நீங்கள் பாம்பேமெயிலில் வந்தீர்களா?''

கேதாரம் ஒரு தடவை ஏற இறங்க மணியைப் பார்த்தான். இருவரும் அப்படி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு ஏன் காலதாமதம் செய்கிறார்கள் என்று கணபதி விழித்தார்.

கடைசியில் மணி, திடீரென்று கத்தினான்: ''டேய், நீ மாம்பிஞ்சு கேதாரம்தானே...? எப்படியடா இப்படி வளர்ந்து பெரியவனாகிவிட்டே..... இத்தனூண்டுக்குக் குள்ளமாயிருப்பியே..... எஸ். எஸ். ஸார்! நானும் இவனும் திருச்சியிலே ஈ. ஆர். ஸ்கூல்லே ஒண்ணாப் படிச்சோம். ஏண்டா, பதினைஞ்சு வருஷங்கள் இருக்காது?''

''தாங்க்ஸ் எஸ். எஸ்..... வாடா, நான் ரிடயரிங் அறையிலேதான் இருக்கிறேன். அங்கே போய்ப் பேசுவோம்.'' கேதாரம் எழுந்தான்.

''சார்! ஜம்புநாதனை எனக்கு நன்றாகத் தெரியும். உங்களுக்குத்தான் என்னைத் தெரியாது. வீட்டுக்கு வாருங்கள், பம்பாய்க்குத் திரும்பிப் போவதற்கு முன்னால்'' என்றார் கணபதி.

''எஸ். எஸ்.ஸின் வீடு எங்கே தெரியுமாடா? இங்கேயேதான் மாடியில்!'' என்றான் மணி.

அவனுடைய மனம் வருத்தத்தை உள்ளடக்கிக் கொண்டு சிரித்துப் பேசியது.

(தொடரும்)

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.45.TM

# இவர் பாராட்டுக்குரியவர்





பொன்மலையில் காந்தி சிலை.

சுமார் பத்தாயிரம் பேர் பணி புரியும் பொன்மலை ரயில்வே தொழிற்சாலை முன்பு காந்தி சிலை வைக்க வேண்டும் என்று திட்டம் கொடுத்தவர் மா. சா. நந்தன்தான். ஆனால் அந்தத் திட்டத்தை நிர்வாகம் ஏற்கவில்லை. நீண்ட காலத் தாமதம் செய்தது. பொருள் உதவி செய்யவில்லை. மத்திய அரசு மறுத்து விட்டது. என்றாலும் அமைத்தே தீருவது என்ற நோக்கத்தோடு வீடுதோறும் சென்று பொருள் திரட்டி உடைந்த பித்தளை, செம்பு, டம்ளர், குடம் முதலியவற்றையெல்லாம் வாங்கி ரயில்வே தொழிலாளர்களிடம் ஒப்படைத்துத் தேசத் தந்தை காந்தியின் உருவத்தை அப்படியே வெண்கலத்தால், வார்ப்படம் செய்து; அதனை எப்படி எங்கே வைக்கலாம் என்று நான்கு நாட்கள் மக்கள் விருப்பத்துக்கு வோட்டுப் பெட்டி வைத்து, வோட்டு எடுத்து, கட்சி வேறுபாடு இன்றி சிலையைத் திறந்த பெருமை நந்தனையே சாரும். இதைவிட அதிகமாகச் செலவு செய்து தமிழ் நாட்டில் காந்தி சிலைகள் நிறுவப்பட்டிருக்கலாம். ஆனால் பொன்மலை சிலைக்கு உள்ள மகத்துவம் அவற்றுக்கு இருக்க முடியாது.



மா. சா. நந்தன்

தி. மு. க. அரசு இன்று பிச்சைக்காரர்கள் மறுவாழ்வுக்கு நிதி திரட்டுகிறது. இதைப் பத்து ஆண்டுகளுக்கு முன்பே-சிறிய அளவில் தான் என்றாலும்-நந்தன் செயலாக்கினார்.

பாரதி நாடக மன்றம் என்னும் குழு அமைத்து மாதமொரு முறை நாடகத்தை அரங்கேற்றி, அதில் ரயில்வே தொழிலாளர்களே பங்கேற்று நடிக்கச் செய்து, அவர்களது குடும்பங்களையே பார்க்கச் செய்து அதன் மூலம் கிடைத்த வருவாயினைக் கொண்டு, பொதுப் பணிக் கழகம் என்ற நிறுவனத்தின் மூலம் பிச்சைக்காரர்களுக்கும், வேலையின்றித் தவித்த நெசவாளர் குடும்பங்களுக்கும் உதவினார். அந்த உதவியும் வெறும் பண விநியோகம் அல்ல. பட்டாணிக் கடை; பழக் கடை, காய்கறிக் கடை, தேங்காய்க் கடை முதலியன அவர்களுக்கு வைத்துக் கொடுத்து, கூட்டுறவு முறையில் குறைந்த லாபத்துடன் சந்தையிலும், தினசரி மார்க்கெட்டிலும் விற்கச் செய்தார். பண உதவி செய்தால் அது இன்று இருக்கும் நாளை போய்விடும். ஆனால் நந்தன் செய்தது நிரந்தர ஏற்பாடாக அல்லவோ ஆயிற்று? ரயில்வே தொழிலாளர் குடும்பங்களைத் தங்களுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் இந்தக் கடைகளிலேயே வாங்கச் செய்து ஏழைகளை வாழ வைத்தவர்தான் மா. சா. நந்தன்.

இன்றும் எங்கள் ஊரில் பலன் பெற்ற எண்ணற்ற குடும்பங்கள் மா. சா. நந்தனை வாயார வாழ்த்தும்.

பொன்மலையில் கல்யாண மண்டபம் கட்ட வேண்டும் என்று சுமார் ஐந்து ஆண்டு காலமாக ரயில்வே நிர்வாகத்தாரிடம் கூறி வருகிறார். நிர்வாகம் யோசனையை ஏற்க மறுக்கிறது. அவர் தீட்டியுள்ள வீணை வடிவத்தோடு கூடிய அழகிய மண்டபத்தின் வரைபடத்தைப் பார்த்தாலே அதைக் கட்டுவித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் தோன்றும். அதைப் பொன்மலையில் கட்டிப் பார்த்துவிடுவது என்ற தளரா உறுதி இன்றும் அவரிடம் உண்டு. அதன் உள்நோக்கு கல்யாண மண்டபம் மட்டும் அல்ல. நாடக அரங்கமாகவும் செயல்படும். பொதுப்பணி கூட்டங்களுக்கும், ரயில்வே விழா, கண்காட்சி போன்றவற்றுக்கும் உதவும். இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டால் பொன்மலை ரயில்வே தொழிலாளிகளுக்கான 'அபட்ஸ்பரி' அமைத்தது போலாகும். — **பி. முருகேசன்**

---

வடஇந்தியத் திருமணங்களில், குறிப்பாக முஸ்லிம்களிடையே ஒரு வேடிக்கையான சம்பிரதாயம் உண்டு. திருமண நாளன்று மணமகளின் தங்கை, மணமகனின் காலணியை எடுத்து எங்கேயாகிலும் ஒளித்து வைத்து விடுவாள். மாப்பிள்ளை அதனைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். மணமகனால் கண்டுபிடிக்க முடியாவிட்டால், ஒளித்து வைத்த பெண்ணே அதனை எடுத்துக் கொடுத்து விடுவாள். ஆனால் அதற்குப் பிரதியாக, மாப்பிள்ளையின் கடிகாரம், பவுண்டன் பேனா போன்ற ஏதாவதொரு பொருளை அவள் கேட்பாள். எந்தப் பொருளைக் கேட்டாலும் மணமகன் அதனைக் கொடுத்தே ஆக வேண்டும்!

குமாரி வித்திகாபானு கூறியது. தகவல்: பா. பானுமதி



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நிழல் வடிவம் பின்புறமாக வந்து அவன் கழுத்தைப் பிடித்து இறுக்கியது. கொழுந்து விட்டு எரிந்த நெருப்பில் அவனை ரவிதாஸனும் அவனுடைய தோழர்களும் தூக்கிப் போட்டார்கள். அவன் உடம்பு பற்றி எரிந்து கொண்டிருந்த போது, கந்தமாறன் அவனைப் பார்த்து, ''அடே! சிநேகத் துரோகி! உனக்கு நன்றாய் வேணும்!'' என்றான். பார்த்திபேந்திரன் அவனைப் பார்த்து, ''அடே! உனக்கும் இளையபிராட்டி குந்தவைக்கும் திருமணம் நிச்சயமாகி விட்டதா? முகூர்த்தம் எப்போது?'' என்று கேட்டு விட்டு இடி இடி என்று சிரித்தான். சேந்தன் அமுதன் அவனைத் தீயிலிருந்து தப்புவிப்பதற்காக எங்கிருந்தோ ஓடி வந்தான். வைத்தியரின் மகன் பினாகபாணி ஒரு மரத்தடியில் ஒளிந்திருந்து சேந்தன் அமுதன் தலையில் ஒரு பெரிய தடியால் அடித்தான்.

## அத்தியாயம் ஐம்பத்தைந்து

## "பைத்தியக்காரன்"

கடம்பூரிலிருந்து தஞ்சைப் பிரயாணத்தின் முதற்பகுதியில் வந்தியத்தேவன் பெரும்பாலும் நினைவிழந்த நிலையில் இருந்தான். கட்டைவண்டி ஒன்றில் அவனைக் கட்டிப் போட்டிருந்தார்கள். கரிகாலன் உயிரிழந்த அன்றிரவு புகையும் தீயும் அவனை வெகுவாக வாட்டியிருந்தன. பிரயாணத்தின்போது சிறிது நினைவு தோன்றிய போதெல்லாம் கண்களின் எரிச்சலும் உடம்பின் நோவும் அவனுக்கு அளவில்லாத வேதனையை உண்டாக்கின. அரை நினைவாக இருந்த போது ஏதேதோ பயங்கரமான தோற்றங்கள் அவன் முன்னே தோன்றி அவனை வாட்டி எடுத்தன. வீரபாண்டியனுடைய தலை மட்டும் அவன் முகத்தருகில் வந்து, ''அடே! நீயா என் பழிக்குக் குறுக்கே நிற்கிறாய்?'' என்று கூறி விட்டுக் கோபமாக விழித்தது. நந்தினி சில சமயம் அணிபணி அலங்காரங்களுடன் அவன் முன்னால் நின்று புன்னகை புரிந்து அவனைத் தன் மாய வலையில் அகப்படுத்தப் பார்த்தாள். இன்னொரு சமயம் தலைவிரி கோலமாக நின்று கண்ணீர் விட்டுப் புலம்பினாள். மற்றொரு சமயம் பேய்க் கோலம் பூண்டு பயங்கரமாகச் சிரித்தாள். ஆதித்த கரிகாலனைத் தொடர்ந்து ஒரு நிழலுருவம் கையில் கத்தியுடன் வந்து கொண்டிருந்தது. வந்தியத் தேவன் அதைத் தடுப்பதற்காகப் பாய்ந்து சென்ற போதெல்லாம் இன்னொரு ராட்சத

உடம்பெல்லாம் தீப்பற்றி எரிந்த போது வந்தியத்தேவனுக்குச் சகிக்கமுடியாத தாகம் எடுத்தது. ''தண்ணீர்! தண்ணீர்!'' என்று அலற எண்ணினான். ஆனால் சத்தம் வரவில்லை. தொண்டை வறண்டு நாக்கு வீங்கி மேலண்ணத்துடன் ஒட்டிக் கொண்டு அவனைப் பேச முடியாமல் செய்தது. இந்த நிலையில் மணிமேகலை கையில் பொற்கிண்ணத்தில் தேவாமிர்தத்தை எடுத்துக் கொண்டு வந்து அவன் வாயில் ஊற்றினாள். அவளுக்கு அவன் நன்றி கூற எண்ணுவதற்குள் அவள் இருளில் மறைந்துவிட்டாள்!... ஆகா! இந்தப் பெண்ணின் அன்புக்குப் பிரதியாக மூன்று உலகங்களையும் அளிக்கலாம்! ஆனால் தனக்கு என்று ஒரு சாண் அகலம் உள்ள இராஜ்யம்கூட இல்லாத நிலையில் இருக்கும் போது, மணிமேகலைக்கு மூன்று உலகங்களையும் கொடுப்பது பற்றி நினைப்பது என்ன அறிவீனம்?

அதோ பூங்குழலி! ''என் காதலர்களைப் பார்!'' என்று கொள்ளிவாய்ப் பிசாசுகளை அவள் சுட்டிக் காட்டுகிறாள்; என்ன அதிசயமான பெண்! ''இந்த மண்ணுலகத்தில் கிடந்து ஏன் உழலுகிறாய்? பொன்னுலகத்துக்கு உன்னை அழைத்துச் செல்கிறேன், பார்!'' என்று கூறுகிறாள். ''பொன்னியின் செல்வன் உள்ள உலகத்தைத்தானே சொல்லுகிறாய்?'' என்கிறான் வந்தியத் தேவன். உடனே நாலாபுறமிருந்தும் கொள்ளிவாய்ப் பிசாசுகள் வந்து அவனைச் சூழ்ந்துகொள்ளுகின்றன. வந்தியத்தேவன் பீதியடைந்து கண்களை மூடிக் கொள்கிறான். பிசாசுகள் அவனைக்

கட்டித் தூக்கிக் கொண்டு போய்க் கோடிக் கரையின் மணல் மேட்டின் மேலேறிக் கீழே உருட்டி விடுகின்றனர்...

வந்தியத் தேவன் திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்க்கிறான். கையில் தீவர்த்திகளைப் பிடித்த காவல் வீரர்கள் அவனை ஒரு படகில் ஏற்றியிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்கிறான். இது என்ன நதியோ, தெரியவில்லை. கொள்ளிடம் அல்லது காவேரி அல்லது குடமுருட்டி ஆறாக இருக்கலாம்.... இதற்குள் மறுபடியும் இருள் வந்து கவிந்து அவன் அறிவை மறைத்துக் கொள்கிறது.....

இப்படி எத்தனையோ விதமான அநுபவங்களுக்குப் பிறகு திடீரென்று ஏழு கடலும் கொந்தளித்துப் பொங்குவது போன்ற சத்தம் கேட்கிறது. அவன் மேலே ஒரு பெரிய அலை வந்து மோதி



அவனை மூழ்க அடிக்கிறது.... இப்போது வந்தியத் தேவன் பூரணப் பிரக்ஞை வந்தவனாகக் கண் விழித்துப் பார்க்கிறான். எதிரே சற்றுத் தூரத்தில் தஞ்சாவூர்க் கோட்டை வாசல் தெரிகிறது. அவன் கட்டுண்டு கிடந்த கட்டை வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் நாலுபுறங்களிலும் ஜனசமுத்திரமாகக் காட்சி அளிப்பதைக் காண்கிறான். அத்தனை பேரும் சேர்ந்து ஓலமிடும் ஓசைதான் ஏழுகடலும் பொங்குவது போன்ற சத்தமாகத் தனக்குக் கேட்டது என்று அறிகிறான். ஆதித்த கரிகாலரின் கடைசி ஊர்வலம் தஞ்சைக் கோட்டையை நெருங்கிவிட்டபடியால் தான் அவ்வளவு கூட்டம் என்றும் தெரிந்து கொள்கிறான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அத்தனை கூட்டமும் அவ்விடம் விட்டு அகன்று சென்று விடுகிறது. அவனும் சம்புவரையரும் மட்டும் காவலர்கள் சிலர் புடைசூழத் தஞ்சைக்கோட்டைக்குள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். ஆகா! அந்த மகா வீரரின் இறுதிக் கிரியைகள் நடக்கும் போது, அவருடைய அந்தரங்கத்துக்குரிய தோழனாக இருந்த தனக்கு அருகில் இருக்கவும் இயலாமற் போயிற்று. அவனுடைய துரதிர்ஷ்டம் இது மட்டுமா? கடைசி வரையில் அவருடைய உயிருக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க எவ்வளவோ முயற்சி எடுத்துத் தோல்வியடைந்த தன் பேரில் அவரைக் கொன்றதாகக் குற்றம் சுமத்தியிருக்கிறார்கள்! அவருடைய திருமேனி கடம்பூர் மாளிகையில் பிடித்த தீயிலேயே எரிந்து போகாமல், இத்தகைய மகா வீரனுக்குரிய மரியாதைகளைப் பெருந்திரளான மக்கள் செய்வது சாத்தியமாகும்படி செய்தவன் அவன். அப்படிப்பட்ட தன்னை இப்போது கொலைகாரர்களையும் சதிகாரர்களையும் அடைக்கும் பாதாளச் சிறைக்குக் கொண்டு போகிறார்கள். கொண்டு போனால் என்ன ? சீக்கிரத்திலேயே தன்னைப் பற்றி இளையபிராட்டியும் பொன்னியின் செல்வரும் விசாரிப்பார்கள். விசாரித்துத் தான் சிறையில் அடைக்கப்பட்டது தெரிந்ததும் பதை பதைப்பார்கள். உடனே சிறையின் சாவியை எடுத்துக் கொண்டு ஓடி வருவார்கள். தன்னை விடுதலை செய்வார்கள். கரிகாலரின் உயிரைத் தன்னால் காப்பாற்ற முடியாமற் போன போதிலும் அவருக்காகத் தான் செய்த முயற்சிகளை யெல்லாம் அறிந்து பாராட்டுவார்கள்....

ஆனால் உண்மையாகவே பாராட்டுவார்களா? தன்னுடைய ஞாபகம் அவர்களுக்கு இருக்குமா? சகோதரனைப் பறிகொடுத்தவர்கள் அந்தத் துக்கத்தில் மற்றதை யெல்லாம் மறந்துவிடமாட்டார்களா? தான் குற்றவாளி இல்லை என்று சொன்னால்தான் நம்புவார்களா? நம்பினாலும் முன்போல் தன் பேரில் நட்புரிமை பாராட்டுவார்களா ?

தங்க நாணயத் தொழிற்சாலையின் வழியாக அவனைப் பாதாளச் சிறைக்குக் கொண்டு போன போது அவனுடைய நம்பிக்கை வர வரக் குறைந்து கொண்டு வந்தது. அந்தத் தொழிற்சாலையைச் சின்னப் பழுவேட்டரையர் சற்று முன்னதாகவே மூடி விட்டார். அந்த வழியில் அப்போது ஆங்காங்கே சிற்சில காவலர்கள் மட்டுமே நின்றார்கள். அவர்கள் பனைமரச் சின்னம் பொறித்த பட்டயங்களைப் பூண்டிருக்கவில்லை. கொடும்பாளூர் வேளார் பழைய சிறைக்காவலர்களை யெல்லாம் அனுப்பிவிட்டுத் தம்முடைய ஆட்களை அங்கே காவலுக்குப் போட்டிருந்தார். புதிதாகச் சிறைக்குள் வந்த இருவரையும் அவர்கள் வெறிக்க வெறிக்கப் பார்த்தார்கள். ஒருவரோடொருவர் ''இவன்தான் கடம்பூர் சம்புவரையன்; இவன் வாணர்குலத்து வந்தியத்தேவன். இளவரசனைக் கொன்ற சண்டாளர்கள்'' என்று பேசிக் கொண்டது வந்தியத் தேவன் காதில் விழுந்தது. புலிக் கூண்டுகள் இருந்த அறை வழியாக அவர்களை அழைத்துச் சென்ற போது, சோழர் குல மன்னர்களின் மறக் கருணைக்கு அவை சின்னங்களாகத் தோன்றின. மறுபடியும் கீழிறங்கிய படிகள் வழியாக அழைத்துச் சென்று வந்தியத் தேவனை ஒரு தனி அறையில் அடைத்துப் பூட்டி விட்டுக் காவலர்கள் சென்ற போது, அவனுடைய நம்பிக்கை முழுதும் போய் விட்டது. அங்கிருந்து தான் விடுதலையாகப் போவதில்லை, உயிர் போன பிறகு தன் உடலைத்தான் ஒருவேளை அங்கிருந்து அப்புறப்படுத்துவார்கள் என்று எண்ணிக் கொண்டான். சின்னப் பழுவேட்டரையருக்கு முன்னமேயே தன் பேரில் சந்தேகம். பார்த்திபேந்திரனுக்கோ தன் பேரில் ஒரே துவேஷம். கிழவன் மலையமானுக்குப் பார்த்திபேந்திரன் பேச்சில்தான் நம்பிக்கை. பழுவேட்டரையர்கள் பரிந்து பேசிச் சம்புவரையர் பேரில் குற்றமில்லை என்று சீக்கிரத்தில் விடுதலை செய்து விடுவார்கள். தன்னை விடுதலை செய்வதற்கு யார் சிரத்தை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள் ? ஒருவரும் இல்லை. தன் பேரில் கொலைக் குற்றமே சாட்டி விடுவார்கள். குற்றம் சாட்டிப் பகிரங்கமாக விசாரணை செய்வார்களா? விசாரித்தால் ஒருவேளை அவன் உண்மையை எடுத்துச் சொல்லிப் பார்க்க

லாம். இல்லை, இல்லை! விசாரணையே செய்யமாட்டார்கள். விசாரணை நடத்தினால் நந்தினியைப் பற்றியும் ரவிதாஸன் கூட்டத்தைப் பற்றியும் உண்மை வெளியாக வேண்டியிருக்கலாம். அதையெல்லாம் யாரும் விரும்ப மாட்டார்கள். தன்னை அச்சிறையிலேயே கிடந்து சாகும்படி விட்டுவிடுவார்கள். அல்லது விசாரணை ஒன்றுமின்றிக் கரிகாலரைக் கொன்றவன் என்பதாகத் தீர்மானித்து நாற்சந்தியில் கொண்டு போய்க் கழுமரத்தில் ஏற்றி விடுவார்கள்.

தெய்வமே! முதன் முதலில் தஞ்சை நகருக்குப் புறப்பட்டு வந்தபோது அவன் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த உற்சாகம் என்ன? என்னவெல்லாம் பகற்கனவு கண்டு கொண்டிருந்தான்? முக்கியமாக, குடந்தை ஜோதிடர் வீட்டில் இளையபிராட்டி குந்தவையையும் வானதியையும் சந்தித்ததிலிருந்து அவன் எப்படிப்பட்ட குதூகலக் கடலில் மிதந்து கொண்டு இந்தத் தஞ்சைக்கு வந்தான்! அப்போது சின்னப் பழுவேட்டரையர் தன்னை ஒற்றன் என்று சந்தேகித்துப் பாதாளச் சிறையில் அடைத்து விடுவாரோ என்று அவன் சிறிது அஞ்சியதுண்டு. அது இப்போது வேறொரு விதத்தில் உண்மையாகி விட்டதே! வான வெளியில் உல்லாசமாகத் திரிந்து பறக்கும் பறவையைப் போல் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த தன்னை இந்த இருளடைந்த அறையில் பூட்டிவிட்டார்களே! இதில் தன்னால் எத்தனை காலம் இருக்க முடியும்? முடியாது! முடியாது! உயிரை விடுவதற்கு ஏதேனும் விரைவில் வழி தேட வேண்டியதுதான்....

இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணி ஏக்கமடைந்து செயலற்று உட்கார்ந்திருந்தான் வந்தியத்தேவன்.

அந்தச் சமயத்தில் பக்கத்து அறையில் யாரோ தொண்டையைக் கனைப்பது கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் கர்ண கடூரமான குரலில்,

''பொன்னார் மேனியனே!....''

என்ற தேவாரப் பாடலும் கேட்டது.

வந்தியத்தேவனுக்கு உடனே சேந்தன் அமுதனுடைய ஞாபகம் வந்தது. பாடியவன் அவன் இல்லை. சேந்தன் அமுதனுடைய குரல் தெய்வீகமான இனிமை பொருந்தியது. இப்போது பாடுகிற குரல் கர்ண கடூரமானது. ஆயினும் அதே பாடலை இங்கே பாதாளச் சிறையில் இருப்பவன் பாடும் காரணம் என்ன?

சிவ, சிவா! காதால் கேட்க முடியவில்லை. பாதாளச் சிறையில் அடைபட்டிருப்பது போதாது என்று இந்த அபூர்வமான சங்கீதத்தைக் கேட்கும் தண்டனை வேறேயா?

''யார், அப்பா, அங்கே?'' என்றான் வந்தியத் தேவன்.

''நான்தான் பைத்தியக்காரன்'' என்று பதில் வந்தது.

''அப்பா! பைத்தியக்காரா! கருணை கூர்ந்து உன் பாட்டை நிறுத்து!''



## அதிசயப் பறவை!

கழுகு போன்ற இப்பறவை 17-5-1971 திங்கட்கிழமை மாலை பண்ணுருட்டிக்கு அருகிலுள்ள திருவதிகையில் பாடல்பெற்ற ஸ்ரீ வீரட்டேசுவர ஆலயத்திற்கு வந்து இராஜகோபுரத்தை மூன்று முறை வலம் வந்து கோவிலின் முன் அமர்ந்தது எனக் கூறப்படுகிறது. இதைக் கண்ட சிறுவர்கள் அந்தப் பறவையைக் கல்லால் அடித்தனர். கடைக்காரர் ஒருவர் பறவையை எடுத்து வந்து தம் கடையில் சிறிது நேரம் வைத்துப் பிறகு அதை வெளியே விட்டார். அது பறந்து போகாததைக் கண்டு மீண்டும் அதைக் கடையில் கொண்டு வைத்தார். அதன் காலில் அறு கோண வடிவத்தில் செப்பால் ஆன ஒரு முருகர் சக்கரம் கட்டப்பட்டிருந்தது. அது தற்போது பிரேம் போட்டு வைக்கப்பட்டுள்ளது.

பக்ஷி கோவிலின் வெளிப் பிராகாரத்தில் உள்ள மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. அதன் உடல் அமைப்பு பெண் மயிலைப் போல் இருக்கிறது. அது எங்கிருந்து வந்தது எனத் தெரியவில்லை. ஏராளமான ஜனங்கள் பார்த்துச் செல்கின்றனர். அது ஜனக்கூட்டத்தைக் கண்டு பதற்றப்படாமல் அமைதியாக இருக்கிறது. பாலும், பழமும் சாப்பிடுகிறது.

— எஸ். ராஜகோபாலன்

''ஏன்? என்னுடைய பாட்டு உனக்குப் பிடிக்கவில்லையா ?''

''பிடிக்காமல் என்ன? உன் பாட்டு எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கிறது !''

''பாட்டை நிறுத்தியபிறகு ரொம்பப் பிடிக்கிறதாக்கும்!''

''அப்படி ஒன்றும் நீ பைத்தியக்காரனாகத் தெரியவில்லை. இந்தப் பாட்டை உனக்கு யார் சொல்லிக் கொடுத்தது?''

''நீ இப்போது இருக்கும் அறையில் சில காலத்துக்கு முன்பு இன்னொரு வாலிபன் வந்திருந்தான். சில நாட்கள் தான் அவன் இருந்தான். அப்போது அவன் ஓயாமல் இந்தப் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான்! எனக்கு அது பாடமாகி விட்டது'' என்றான்.

வந்தியத்தேவன் உடனே அந்த வாலிபன் சேந்தன் அமுதன்தான் என்று தீர்மானித்துக் கொண்டான். தான் தப்பித்துச் செல்வதற்கு உதவி செய்ததற்காகச் சேந்தன் அமுதனைச் சின்னப் பழுவேட்டரையர் சில நாட்கள் பாதாளச் சிறையில் அடைத்திருந்தார் என்பதைக் கேள்விப்பட்டிருந்தான். இந்த அறையில் இருந்தவன் அவனாகத்தான் இருக்க வேண்டும். ஆகா ! சேந்தன் அமுதன் எவ்வளவு தங்கமான பிள்ளை ! எத்தகைய அருமையான சிநேகிதன் !

''இந்த அறையில் சில நாட்கள் இருந்த வாலிபன் யார் ? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''தெரியாமல் என்ன? அவன் பெயர் சேந்தன் அமுதன். யாரோ ஒரு ஊமைச்சியின் மகனாம்! உண்மையில் அவன் யார் என்பது மட்டும் உலகத்துக்குத் தெரிந்தால்....?''

''தெரிந்தால் என்ன ஆகும்?''

''உலகமே தலைகிழாகப் போய் விடும் !''

''உலகம் தலைகிழானால், நமக்கு இந்தப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை கிடைக்குமா?''

''நிச்சயமாய்க் கிடைக்கும்?''

''அப்படியானால் அவன் யார் என்று தான் சொல்லேன் ?''

''அவ்வளவு சுலபமாக உன்னிடம் சொல்லி விடுவேனா? அதைச் சோழ சக்கரவர்த்தியின் காதிலே மட்டுந்தான் சொல்வேன்! இன்னும் சுந்தர சோழர் தானே சோழ நாட்டின் சக்கரவர்த்தியாயிருக்கிறார்?'' என்று கேட்டான்.

''ஆமாம்; அதைப் பற்றி உனக்கு என்ன சந்தேகம்?''

''சில நாளைக்கு முன்பு இங்கே சில மாறுதல்கள் நடந்தன. பழைய சிறைக் காவலர்கள் எல்லாம் மாறிப் புதிய சிறைக் காவலர்கள் வந்தார்கள். தங்க நாணய வார்ப்படச் சாலையை மூடிவிட்டார்கள். அதை மூடாதிருந்த போது, கன்னார்கள் வேலை செய்யும் சத்தம் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருக்கும்.''

''ஏன் மூடிவிட்டார்கள்? ஏன் காவற்காரர்கள் மாறினார்கள்?''

''சின்னப் பழுவேட்டரையர் கோட்டைக் காவலை விட்டு ஓடிப் போய் விட்டாராம். கொடும்பாளூர் வேளார் தஞ்சைக் கோட்டையைப் பிடித்துக் கொண்டாராம். காவற்காரர்களின் பேச்சிலிருந்துதான் இவைகளைத் தெரிந்து கொண்டேன்......''

''ஓகோ! அதுவும் அப்படியா?'' என்றான் வந்தியத்தேவன். உண்மையிலேயே அவன் பெரு வியப்பு அடைந்தான்.

கொடும்பாளூர் பூதிவிக்கிரமகேசரி தன்னை நன்கு சோதித்து அறிந்தவர். அவர் ஒரு வேளை தன் பேச்சை நம்பித் தன்னை விடுதலை செய்வாரா? — அவரால்தான் அது எப்படி முடியும் ? யாராலேதான் முடியும்? இளவரசர் கரிகாலரைக் கொன்றவன் என்று குற்றம் சாட்டப்பட்டவனை யார்தான் எளிதில் விடுதலை செய்துவிட முடியும்?

''என்ன, தம்பி, மௌனமாகிவிட்டாய்? மறுபடியும் பாடத் தொடங்கட்டுமா?'' என்று பைத்தியக்காரன் தொண்டையைக் கனைத்தான்.

''வேண்டாம், வேண்டாம். நீ கூறியதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். சேந்தன் அமுதன் ஊமைச்சியின் மகன் அல்ல என்று சொன்னாயே ? பின், அவன் யாராயிருக்கும் என்று யோசிக்கிறேன்.''

''அந்தப் பேச்சை விட்டுவிட்டு வேறு ஏதாவது சொல்லு!''

''உன்னை எதற்காகப் பைத்தியக்காரன் என்று சொல்லிக் கொள்கிறாய்?''

''இங்கே வந்தவர்கள் எல்லாரும் என்னைப் பைத்தியக்காரன் என்று சொல்லுவதினாலேதான்.''

''ஏன் அப்படி அவர்கள் எல்லாரும் சொல்லுகிறார்கள்?''

''ஈழத்தில் பாண்டிய வம்சத்து மணி மகுடமும் தேவேந்திரன் அளித்த இரத்தின ஹாரமும் இருக்குமிடம் எனக்குத் தெரியும். என்னை விடுதலை செய்தால் அவை இருக்குமிடம் சொல்வேன் என்று இங்கே வருகிறவர்களிடமெல்லாம் நான் சொல்வதுண்டு. அதற்காக என்னைப் பைத்தியம் என்கிறார்கள்.''

''உன்னைப் பைத்தியம் என்கிறவர்கள் தான் உண்மைப் பைத்தியக்காரர்கள்.''

''நீ என் வார்த்தையை நம்புகிறாயா ?''

''பரிபூரணமாக நம்புகிறேன். ஆனால் நான் நம்பி என்ன பயன்? உனக்கு என்னால் ஒரு உதவியும் செய்யமுடியாதே!''

''அப்படிச் சொல்லாதே! நீ இப்போது இருக்கும் அறையில் அடைக்கப்படுகிறவர்கள் எல்லாரும் சீக்கிரத்தில் விடுதலை செய்யப்படுவது வழக்கமாயிருந்து வருகிறது'' என்று சொன்னான்.

''அது என்ன வழக்கம்? சில உதாரணங்கள், சொல், பார்க்கலாம்.''

''யாரோ வைத்தியர் மகன் ஒருவன், பினாகபாணி என்கிறவன், உன் அறையில் அடைக்கப்பட்டிருந்தான். அவனைப் பழுவூர் ராணி நந்தினி தேவி வந்து விடுதலை செய்து அழைத்துப் போனாள். அந்த அறையிலேயே சேந்தன் அமுதன் இருந்தான். அவனைக் குந்தவை தேவியும் கொடும்பாளூர் இளவரசியும் வந்து விடுதலை செய்தார்கள்.....''

வந்தியத் தேவன் ஒரு நெடிய பெருமூச்சு விட்டு விட்டு, ''அந்த மாதிரி என்னை வந்து விடுதலை செய்ய எந்த ராணியும் இளவரசியும் வரமாட்டார்கள்!'' என்றான்.

''அப்படியானால் நானே உன்னை விடுதலை செய்கிறேன்'' என்றான் அடுத்த அறையில் இருந்தவன்.

''இப்போதுதான் நீ பைத்தியக்காரன் போலப் பேசுகிறாய்!'' என்றான் வல்லத்திளவரசன் வந்தியத்தேவன்.

''இல்லை; என் வார்த்தையை நம்பு!''

''வேறு வழியில்லை; உன்னை நம்பித்தான் தீர வேண்டும்.''

''அப்படியானால், இன்றிரவு காவலர்கள் வந்து நமக்கு உணவு அளித்துவிட்டுப் போகும் வரையில் பொறுமையுடன் இரு!'' என்றான் பைத்தியக்காரன் என்று பெயர் வாங்கியவன்.

## அத்தியாயம் ஐம்பத்தாறு

# "சமய சஞ்சீவி"

அன்றிரவு கடைசிக் காவலன் வந்து விட்டுப் போனதும், வந்தியத் தேவன் அடுத்த அறையிலிருந்த பைத்தியக்காரன் என்ன சொல்லப் போகிறான் என்று அறிய ஆவலுடன் காத்திருந்தான்.

அந்த அறையின் ஒருபக்கத்துச் சுவரில் எலி பிறாண்டுவது போல் ஏதோ சத்தம் கேட்டது. வந்தியத்தேவனுக்குப் புலி சிங்கத்தினிடம் பயமில்லை; ஆனால் பூனைகளுக்கும் எலிகளுக்கும் பயம். இரவெல்லாம் அந்த இருளடர்ந்த அறையில் எலிகளுடன் காலங் கழிக்க வேண்டுமோ என்று கவலைப்பட்டவனாக, ''பைத்தியக்காரா! தூங்கிப் போய் விட்டாயா?'' என்று கேட்டான்.

அதற்குப் பதில் ஒன்றும் வரவில்லை.

எலி பிறாண்டும் சத்தம் மட்டும் மெதுவாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் சுவரிலிருந்து சில கற்கள் பெயர்ந்து விழுந்து துவாரம் ஒன்று உண்டாயிற்று.

அதன் வழியாகப் பைத்தியக்காரன் குரல், ''அப்பனே! தூங்கிவிட்டாயா?'' என்று கேட்டது.

''இல்லை; தூங்கவில்லை. உனக்காகத்தான் காத்திருக்கிறேன். இது என்ன வேலை?'' என்றான் வந்தியத்தேவன்.

''இது ஆறு மாதத்து வேலை. அதற்கு முன்னால் என் கைச் சங்கிலியைத் தறித்துக் கொள்வதற்கு ஆறு மாதம் பிடித்தது'' என்றான் பைத்தியக்காரன்.

சற்று நேரத்துக்கெல்லாம் துவாரத்தை இன்னும் பெரிதாகச் செய்து கொண்டு வந்தியத் தேவனுடைய அறைக்குள்ளே அவன் புகுந்தான்.

வந்தியத் தேவன் அவனுடைய கரங்களைப் பிடித்து இறக்கிவிட்ட பிறகு, ''இவ்வளவு கஷ்டப்பட்டு இந்தச் சுவரில் துவாரம் செய்தாயே? இதில் என்ன பயன்? வெளிச் சுவரில் துவாரம் போட்டாலும் பயன் உண்டு!'' என்றான்.

''இங்கிருந்து வெளிச் சுவர் என்பதே கிடையாது. புலிக் கூண்டு அறையின் வழியாகத்தான் வெளியேற முடியும். இந்த அறை சில சமயம் காலியாக இருப்பதுண்டு. அப்போது பூட்டப்படாமலுமிருக்கும். ஆகையால், என் அறையிலிருந்து தப்பிச் செல்வதைவிட இங்கிருந்து தப்புவது சுலபம்.''

''இன்றைக்கு வந்த என்னை நம்பி இதை வெளிப்படுத்திவிட்டாயே? நான் உன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டால் என்ன செய்வாய்?''

''ஒருவனை நம்பலாம், நம்பக்கூடாது என்பதைக் குரலிலிருந்தே கண்டுபிடிக்கலாம். சேந்தன் அமுதனை நம்புவேன்; ஆனால் பினாகபாணியை நம்பமாட்டேன். உன் குரலிலிருந்து உன்னை நம்பலாம் என்றும் முடிவு செய்தேன். மேலும் தப்பிச் செல்லும் காரியம் இப்போது நடந்தால்தான் நடந்தது. சரியான சந்தர்ப்பம் இதுதான்!''

''அது ஏன்?''

''காவற்காரர்கள் மாறியிருக்கிறார்கள் என்று சொன்னேன் அல்லவா? அவர்களில் இரண்டுபேர் பேசிக்கொண்டிருந்த

-தைக் கேட்டேன். புலிக் கூண்டைத் திறந்து விடுவதைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். 'புலிக் கூண்டைத் திறக்கும் போது நம் பேரி லேயே புலி பாய்ந்து விட்டால் என்ன செய்கிறது?' என்று ஒருவன் கேட்டான். அதற்கு மற்றவன், 'சாக வேண்டியதுதான்!' என்றான். இதிலிருந்து அவர்கள் புலிக் கூண்டைத் திறக்க மாட்டார்கள் என்பது நிச்சயம். புதிய காவற்காரர்களாதலால் திடீரென்று பாய்ந்து சென்று தப்பித்துக் கொள்ளலாம் என்று என் எண்ணம். எப்படி இருந்தாலும் இங்கேயே கிடந்து சாவதைக் காட்டிலும் விடுதலைக்கு முயற்சி செய்து பார்ப்பது நல்லதல்லவா?''

''உண்மைதான்!''

''ஒருவனுக முயற்சி செய்வதைக் காட்டிலும் இரண்டு பேராக முயற்சி செய்வது எளிது. நீ என்னைப் போல் இல்லை; புதிதாக வந்தவன். நல்ல திடகாத்திரனுயிருக்கிறாய். இரண்டு காவலர்களை நாம் இருவரும் கட்டிப் போட்டு விட்டு அவர்களிடமிருந்து சாவிகளைப் பிடுங்கிக் கொண்டு வெளியேறலாம் அல்லவா?''

''நல்ல யோசனைதான். எப்பொழுது புறப்படலாம்?''

''கொஞ்சம் பொறு; சரியான சமயம் பார்த்துச் சொல்கிறேன்.''

''நானும் ரொம்பக் களைத்துப் போயிருக்கிறேன். ஒரு நாள் — இரண்டு நாள் போனாலும் நல்லதுதான்.''

பிறகு, அந்தப் பைத்தியக்காரன் அவன் சிறையிலிருந்த காலத்தில் வெளி உலகில் நடந்த முக்கிய சம்பவங்களையெல்லாம் வந்தியத்தேவனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

ஆதித்த கரிகாலர் இறந்தார் என்று கேட்டதும், ''ஆகா! அப்படியானால் நாம் இப்போது வெளியேறுவது மிக முக்கியம்!'' என்றான்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''அடுத்தபடி இராஜ்யத்துக்கு யாரையாவது இளவரசுப் பட்டம் கட்ட வேண்டும் அல்லவா?''

''இளவரசுப் பட்டம் என்ன? சக்கரவர்த்தி உடல் நோயினாலும் மனச் சோர்வினாலும் பீடிக்கப்பட்டிருக்கிறார். இராஜ்ய பாரத்தை அடியோடு விட்டு நீங்க விரும்புகிறார்!''

''யாருக்கு மகுடம் சூட்டுவதாகப் பேச்சு நடக்கிறது?''

''சிற்றரசர்கள் சிலர் மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட விரும்புகிறார்கள். மற்றும் சிலர் பொன்னியின்செல்வருக்கு மகுடம் சூட்ட விரும்புகிறார்கள்!''

''சக்கரவர்த்தியின் கருத்து என்ன?''

''இராஜ்யத்தில் வீண் சண்டை ஏற்படாமல் தடுக்கும் பொருட்டு மதுராந்தகர் சிங்காதனம் ஏறுவதையே சக்கரவர்த்தி விரும்புகிறாராம்.''

''அப்படியானால், நாம் சீக்கிரத்தில் வெளியேற வேண்டியது ரொம்ப ரொம்ப அவசரமாகிறது!'' என்றான் அந்தப் பைத்தியக்காரன்.

பிறகு, அவன் ஈழ நாட்டில் பாண்டியர் மகுடமும் இரத்தின ஹாரமும் இருக்குமிடம் பற்றித் தான் தெரிந்து கொண்ட விதத்தை விவரமாகக் கூறினான்.

சோழ குலத்து இரகசியத்தைப் பற்றி மறுபடியும் வந்தியத் தேவன் கேட்டதற்கு, ''அதை இப்போது சொல்ல மாட்டேன். இருவரும் தப்பிப் பிழைத்து வெளியேறினோமானால் சொல்லுவேன். இல்லாவிடில் அந்த இரகசியம் என்னோடு மடிய வேண்டியதுதான்!'' என்றான்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் தீவிரமாகச் சிந்தனையில் ஆழ்ந்தது. அந்தப் பைத்தியக்காரன் சொல்லக்கூடிய அந்த கைய இரகசியம் என்னவாயிருக்கும் என்று ஊகித்துப் பார்த்தான். பற்பல நிழல் போன்ற நினைவுகள் அவனுடைய மனத் திரையில் தோன்றி மறைந்தன.

* * *

திடீரென்று வைத்தியர் மகனைப் பார்த்ததும் வந்தியத் தேவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தானும் அடுத்த அறையில் உள்ளவனும் சேர்ந்து செய்திருக்கும் யோசனைக்கு இவன் தடை போட்டு விடுவானோ என்று கவலைப்பட்டான். பினாகபாணியின் நயவஞ்சகப் பேச்சை அவன் நம்பவில்லை. அவனும் பைத்தியக்காரனும் இவ்விஷயத்தில் ஒரு மனமுடையவர்களாயிருந்தார்கள். ஏதோ துர் எண்ணத்துடனேதான் பினாகபாணி வந்திருக்கிறான் என்று முடிவு செய்து கொண்டார்கள். ஒருவரைச் சிறையில் விட்டு விட்டு இன்னொருவர் வெளியேறிப் போவதில்லை என்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். மறுபடியும் பினாகபாணி வந்தால் என்ன செய்கிறது என்றும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

எனவே, இரண்டாவது தடவை பினாகபாணி வந்தபோது இருவரும் முன் ஜாக்கிரதையாக இருந்தார்கள். பைத்தியக்காரனிடம் முத்திரை மோதிரத்தைக் காட்டி அவனுடைய இரகசியத்தைச் சொல்லும்படி வைத்தியர் மகன் கேட்டுக் கொண்டிருந்த போது வந்தியத் தேவன் இரண்டு அறைகளுக்கும் நடுவில் சுவரில் ஏற்கனவே செய்



காலையில் செய்திப் பத்திரிகை யைப் படிக்காமல்...? ஓ! இன்று வியாழக் கிழமையோ? **கல்கி** வந்திருக்கு... அதானே பார்த்தேன்! ஆமா.. அதிலே என்ன பளிச்சுன்னு...
**வாண்டு மாமா** எழுதும் புதிய சித்திரத் தொடர் ஆரம்பமாகிறதாம் அந்த அறிவிப்புதான் அது.
வாண்டு மாமாவோட கதையா? குஷிதான்!
கல்கி
ஹையா, ஹையா..! வாண்டு மாமா கதை.

திருந்த துவாரத்தின் வழியாக ஓசைப் படாமல் புகுந்து அந்த அறைக்குள்ளே வந்தான்.

பினாகபாணி திரும்பி அவனைத் தாக்கவே, இருவரும் துவந்த யுத்தம் செய்தார்கள். வேறு சமயமா யிருந்தால் வந்தியத்தேவன் வைத்தியர் மகனை ஒரு நொடியில் வென்று வீழ்த்தியிருப்பான். மேலே நெருப்புச் சுட்ட புண்கள் இன்னும் நன்றாக ஆறாதபடியாலும், காளாமுக ராட்சதன் அவனுடைய தொண்டையைப் பிடித்து அமுக்கிய இடத்தில் இன்னும் வலித்துக் கொண்டிருந்தபடியாலும் துவந்த யுத்தம் நீடித்தது. அச்சமயத்தில் பைத்தியக்காரன் கையில் சங்கிலியுடன் வந்து பினாகபாணியின் கழுத்தில் போட்டு இறுக்கினான். பினாகபாணி கீழே விழுந்தான்.

பிறகு, இருவரும் அவனை அந்த அறையின் சுவர்களில் இருந்த இரும்பு வளையங்களுடன் சேர்த்துக் கட்டினார்கள். அப்படிக் கட்டும் போதே வந்தியத் தேவன், ''பினாகபாணி! நாம் இருவரும் சக்கரவர்த்தியைக் குணப்படுத்துவதற்காகச் சஞ்சீவி மூலிகையைத் தேடி ஈழ நாட்டுக்குப் போனோமே நினைவு இருக்கிறதா? அப்போது நாம் சஞ்சீவி கொண்டு வருவதில் வெற்றி பெறவில்லை. ஆனால் இப்போது நீ எங்களுக்குச் 'சமய சஞ்சீவி'யாக வந்து சேர்ந்தாய்! இந்த உதவிக்காக மிக்க வந்தனம். வைத்தியர் மகனாகிய நீ இனி மேல் வைத்தியத்துடன் நிற்பது நல்லது. ஒற்றன் வேலையில் தலையிட்டு ஏன் வீணாகக் கஷ்டத்தை விலைக்கு வாங்கிக் கொள்கிறாய்?'' என்று சொன்னான்.

பினாகபாணி அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. திடீரென்று நேர்ந்த இந்த விபத்தினால் அவன் பேச்சிழந்து நின்றான். ஆனால் அவனுடைய கண்கள் மட்டும் கோபக் கனலைக் கக்கின என்பது அவன் கொண்டு வந்து கீழே போட்டிருந்த தீவர்த்தி வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது.

பின்னர் இருவரும் வைத்தியர் மகன் கொண்டு வந்திருந்த அதிகார முத்திரையைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பினாகபாணி தலையில் சுற்றியிருந்த துணியை எடுத்து வந்தியத் தேவன் தன் தலையில் சுற்றிக் கொண்டான்.

அந்த அறையிலிருந்து வெளி வந்து கதவைப் பூட்டினார்கள். பிறகு மெள்ள மெள்ள நடந்து பாதாளச் சிறையின் படிக்கட்டில் ஏறினார்கள். வழி சரியாகத் தெரியாதவர்களாதலால், நிதானமாக அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு நடந்தார்கள். புலிகளின் உறுமல் சத்தம் கேட்டதும் இருவருக்கும் மேலே போகச் சிறிது தயக்கமாகவே இருந்தது. ஒரு வேளை, தாங்கள் தப்புவதை எப்படியோ அறிந்து புலியைக் கூண்டிலிருந்து அவிழ்த்து விட்டிருப்பார்களோ? வந்தியத் தேவனும் பைத்தியக்காரனும் புலிக் கூண்டு அறைக்குள்ளே மெதுவாக எட்டிப் பார்த்தார்கள்.

அந்த அறையில் அச்சமயம் ஒரே ஒரு காவலன்தான் இருந்தான். உறுமிய புலிகள் இருந்த கூண்டை அவன் உற்று நோக்கிக் கொண்டிருந்தான். ஒருவேளை புலிக் கூண்டைத் திறந்து புலிகளைத் தங்கள் மீது ஏவிவிட அவன் யோசிக்கிறானோ, என்ன? அச்சமயம் வைத்தியர் மகன் கூச்சல் போட ஆரம்பித்திருந்தான். அந்தக் கூச்சல் இக்காவலனுடைய சந்தேகத்தைக் கிளப்பிவிட்டிருக்கலாம் அல்லவா? பினாகபாணியின் வாயில் துணியை அடைத்து விட்டு வராதது எவ்வளவு தவறாகப் போயிற்று? **(தொடரும்)**

## மழை செய்த பிழை!

(இங்கிலாந்து காப்டன் ''இல்லிங்வொர்த்'' பாடாத கவிதை!)



மழையே உனக்கு
மென்னி இருந்தால் சொல்லு,
ஆசை தீர என் கையால்
அழகாய் முறிக்கின்றேன்!
அன்றைக்கு என்றாலு.
அமோக வெற்றி பெறும் சமயம்
குடிமுழுகிப் போனாற் போல்
கொட்டென்று கொட்டினாய்!
இரண்டாம் 'டெஸ்ட்' இறுதியிலும்
இங்கிலாந்து ஜெயிக்கும் சமயம்
ஈவிரக்கமின்றி நீ
இரவு பகலாய்க் கொட்டித் தீர்த்தாய்!
ஆயின், அந்தோ! இறுதி 'டெஸ்டி'ல்
ஆபத்தெங்களை அணைக்கும் சமயம்
இடித்த புளி கணக்காய், பேசாமல்,
இங்கிலாந்தையே காணாமல்,
தொலை தேசத்துக்குத் தொலைந்து
விட்டுத்
தோல்வியெங்களை அணைக்கச்
செய்தாய்!

கல்நெஞ்சக்கார மழையே!
காத்திருந்து மோசம் செய்த உனக்கு
மென்னி இருந்தால் சொல்லு
ஆசைதீர என் கையால்
அழகாய் முறிக்கின்றேன்!

— கே. வி. முரளி

உங்கள் குழந்தைக்கு
ஜலதோஷம் வரும்போது
எரிச்சலுடன் சிடுசிடுத்து அழுகிறன்
மூச்சுவிட முடிவதில்லை,
தூங்க முடிவதில்லை.

அப்போது விக்ஸ் வேபோரப்
தாலாட்டுவதுபோல
வேலைசெய்கிறது

## விக்ஸ் வேபோரப் மூக்கு அடைப்பை உடனேபோக்குகிறது. தாராளமாக மூச்சுவிட உதவுகிறது. குழந்தை சுகமடைந்து நிம்மதியாகத் தூங்குகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு, அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் நேரடியாகத்தடவலாம். ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து குழந்தை உடனே நிவாரணம்பெறுகிறது. தாராளமாக மூச்சு விடுகிறது. சுகம் அடைகிறது.

விக்ஸ் வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1. 

உடம்பின் மேலே

2. 

உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல் வலியைப் போக்குகிறது.

2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச்சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்கு கிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

**முக்கியமான குறிப்புகள்**

விரைவில் குணம்பெற விக்ஸ் வேபோரப்பை கனிசமாகத் தடவவும்—ஒரு ஸ்டாண்டர்ட் சைஸ் (19 கிராம்) ஜாடி குழந்தைக்கு எழு எட்டு முறையும், வயதுவந்தவருக்கு மூன்று நான்கு முறையும் தடவப் போதுமானது.



விரைவாக குணம்பெற, மூக்கு தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள். ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்துவரவும்.




12 கிராம் பெரிய டின்




## ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ் வேபோரப்

ரிச்சர்ட்ஸன் ஹிந்துஸ்தான் லிமிடெட்டின் தயாரிப்பு.

251

# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்

## பகலில் உடலுக்கு உரமூட்டும்...
## இரவில் நிம்மதியூட்டும்!





**விவா** பருகுங்கள்—சூடாகவோ, குளிர்ந்ததாகவோ. நீருடன் அல்லது பாலுடன் கலந்து. விவாவிலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது — மால்ட், கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இது உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு இதமூட்டி, தசைகளுக்கு நலமூட்டுகின்றது.

காலையில் **விவா** பருகினால், பகல் முழுவதும் நீங்கள் உயிர்த்துடிப்புடன் விளங்குவீர்கள! படுக்கும்போது அருந்தினால், இரவு முழுவதும் நிம்மதியுடன் உறங்குவீர்கள்!

**விவா**, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்—நோயாளிகளுக்கும் பிணியாறி வருபவர்களுக்கும் சஞ்சீவி!

## *சுவையில் சிறந்தது—*
## *விரைவில் கரைவது!*







Shilpi J.I. 4B-71 Tam.

இந்தியாவில் தயாரிப்போர்:
**ஜகஜ்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**

ஏகபோக விற்பனை ஏஜென்டுகள் :
வோல்டாஸ் லிமிடெட்

# சில மனிதர்கள்-சில நினைவுகள்



உதகமண்டலத்தில் ஔவை டி. கே. ஷண்முகம் குழுவினரின் 'பம்பாய் மெயில்' நாடகத்துக்கு ஏற்பாடாகியிருந்தது. அந்த நாட்களில் இந்த 'பம்பாய் மெயில்' நாடகம் பிரசித்தமடைந்திருந்த சில நாடகங்களில் ஒன்று. ஆனால் குளிருக்கு அஞ்சியோ என்னவோ அரங்கத்தில் கூடியிருந்த ரசிகர்களின் எண்ணிக்கை குறைவாகவே இருந்தது.

நாடகத்தின் ஒரு காட்சியில், ஷண்முகம் கிணற்றுக்குள்ளிருந்து தம் தம்பியை மேலே தூக்கி வருவது போல நடிக்க வேண்டும். கிணறு அமைப்புக்குள் தண்ணீரை முன்ஏற்பாடாக ஒரு தொட்டியில் வைத்து அதை மேலே கொட்டிக் கொண்டு வருவது நாடக உத்தி. குளிரை உத்தேசித்து அன்று அந்தத் தொட்டியில் வெந்நீரை நிரப்பும்படி ஷண்முகம் சொல்லியிருந்தார். ஆனால் மேடை நிர்வாகிகள் எப்படியோ இந்த விஷயத்தை மறந்து விட்டார்கள்.

கிணறு அமைப்புக்குள்ளே குதித்த ஷண்முகம் தொட்டியிலிருந்த தண்ணீரைத் தம்மேலும் தம் தம்பி பாத்திரக்காரர் மேலும் அவசரமாகக் கொட்டினார். ஆனால் அது ஐஸ் தண்ணீர் போன்ற குளிர்ந்த ஜலம். அப்படியே மேடைக்கு வந்து சில நிமிடங்கள் நடிக்க வேண்டிய சூழ்நிலை. நள்ளிரவு நேரம். ஏற்கனவே வெளியில் கடும் குளிர். போதாததற்குப் பச்சைத் தண்ணீர் அபிஷேகம்!



திரு டி. கே. சண்முகம்

சபையில் இருந்தவர்களும், மேடையில் நடித்தவர்களின் நடுக்கத்தைக் கண்டு அனுதாபப்பட்டது அந்த வேளையில் ஷண்முகத்துக்கு ஆறுதலாகவே இருந்தது.

ஃ ஃ ஃ

காலஞ்சென்ற ப. ஜீவானந்தத்துக்கு இளமையிலிருந்தே நியாயத்திற்காகப் போராடும் குணம் இயல்பாக அமைந்திருந்தது. பூதப்பாண்டியில் உள்ள ஆங்கில நடுத்தரப் பள்ளி ஒன்றில் அவர் இரண்டாம் பாரம் படித்த காலம். அவர் கணக்குப் பாடத்தில் ஒரு புலி. அந்த வகுப்புப் பரீட்சையில் அத்தனை கணக்குகளுக்கும் அவர் சரியான விடை அளித்திருந்தார். ஆனால் அவர் விடைத்தாளைத் திருத்திய தலைமை ஆசிரியர் ஏனோ ஐந்து மார்க்குகளைக் குறைத்தே போட்டிருந்தார்.

கிடைத்த தொண்ணூற்றி ஐந்து மார்க்குகளால் ஜீவானந்தம் திருப்தியடையவில்லை. தமக்கு இன்னும் நியாயமாகச் சேர வேண்டிய ஐந்து மார்க்குகளுக்காக, அவர் விடைத் தாள்களுடன் தலைமை ஆசிரியரை அணுகி வாதாடினார். ஜீவானந்தத்தின் கோரிக்கை நியாயமானது என்பதைப் புரிந்து கொண்ட தலைமை ஆசிரியர் விட்டுப் போன ஐந்து மார்க்குகளைப் போட்டே பையனைத் திருப்பி அனுப்பினார்.

ஃ ஃ ஃ

ஏ. பி. ஹெர்பெர்ட் என்ற ஆங்கில நாவலாசிரியருக்குக் கற்பனையில் ஒரு நல்ல தலைப்பு தோன்றியது. 'Married Alive' என்பதுதான் அந்தத் தலைப்பு. ஆனால் அந்தத் தலைப்புக்கேற்ற கதையை அவரால் கற்பனை செய்ய முடியவில்லை. சும்மா இருந்தார்.

இதைக் கேள்விப்பட்ட ரால்ஃப் ஸ்ட்ராஸ் (Ralph Straus) என்ற மற்றொரு நாவலாசிரியர், ஹெர்பெர்ட்டை அணுகி, அந்தத் தலைப்புக்கேற்ற நாவல் ஒன்றைக் கற்பனை செய்திருப்பதாகவும் அந்தத் தலைப்பைத் தம் உபயோகத்துக்கு அனுமதிக்கும்படியும் வேண்டினார். ஹெர்பெர்ட் சரியென்று சொல்லிவிட்டார்.

ரால்ஃப் ஸ்ட்ராஸ் அந்தத் தலைப்பில் ஒரு நாவல் எழுதிப் பிரசுரித்தார். ஹாலிவுட் திரைப்படத் தயாரிப்பாளர்



ஜீவ களையுடன் ஜீவா சிலை

ஒருவர் கண்ணில் அந்த நாவல் தென்பட்டது. அந்தத் தயாரிப்பாளருக்கு அந்தத் தலைப்பில் ஒரு கவர்ச்சி. ரால்ஃப் ஸ்ட்ராஸிற்கு அவர் நாவலின் தலைப்புக்காக மாத்திரம் எழுநூறு டாலர் சன்மானம் கொடுத்துவிட்டுப் படத்திற்கான கதையை வேறு ஒருவரைக் கொண்டு எழுதச் செய்தார். ரால்ஃப் நாவலுக்கும் அந்தப் படக் கதைக்கும் கொஞ்சம்கூடச் சம்பந்தமில்லை! தலைப்புக்கு அப்படி ஒரு மதிப்பு! —மேனு



# சூழ்க்கால்லை

## அத்தியாயம் 26

''சதிகாரர்கள் தங்கள் திட்டங்களை மிக மிக ரகசியமாக நிறைவேற்ற எண்ணி யிருந்தார்கள். ரகசியம் காக்கப்படும் தன்மையிலே தான் அவர்களுடைய வெற்றியே அடங்கி யிருந்தது. ஆனால் ஆரம்ப கட்டத்திலேயே ரகசியம் ராமுவுக்குத் தெரிந்து விட்டதனால், அதன் அஸ்திவாரத்திலேயே கலகலப்பு ஏற்பட்டு விட்டதை உணர்ந்தார்கள். அதனால் ராமு அங்கேயே அப்போதே கொலை செய்யப்பட்டான். தாற்காலிகமாக அவன் உடலை மறைத்து விட்டார்கள். பிறகு அவன் பணத்தோடு ஓடிவிட்டதாக வதந்தியைக் கிளப்பினார்கள். அவனைத் தேடும் முயற்சியில் போலீசாரை ஸ்தம்பிதமடையச் செய்வதே அவர்களின் நோக்கம். அதிலும் வெற்றிதான். ராமு திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையில் அடக்கம் செய்யப்பட்டான்.''

டாக்டர் ரகுநாத் தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியின் கைப் பிடியை வெறியோடு பிடித்து முறுக்கினார்.

''காணாமல் போன ராமுவைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தவர்களின் கவனம் முல்லைவாசல் பகுதியில் அதிகமாக இடம் பெறவில்லை. அதாவது நிர்மலாவின் சகோதரன் பாலு தன்னிச்சையாக ஜமீன் பங்களாவில்தான் ராமுவின் மறைவு நேர்ந்திருக்க வேண்டும் என்று எண்ணி வரும் வரையில். இதைக் குற்றவாளிகளின் அதிர்ஷ்டம் என்றுதான் கூற வேண்டும். திராட்சைக் கொடி வீட்டின் அடைப்புக்களை அகற்றிப் பாலு உள்ளே புகுந்ததைக் கொலைகாரன் பார்த்துவிட்டான். ஆகவே, அந்த நிமிஷமே அந்த இடத்திலேயே அவனும் கொல்லப்பட்டான். இந்தத் தடவையும், இந்தக் குரூரச் செயலைப் பற்றிய உண்மை கோகிலாவுக்குத் தெரியாமல் மறைக்கப்பட்டது. கோகிலா இவர்களைப் போல் அத்தனை கொடுமைக்காரியல்ல. கொலைகளைச் சுலபமாக ஜீரணிக்கும் திராணி அவளுக்குக் கிடையாது. உண்மை தெரிந்திருந்தால் ஒருவேளை கொலைகாரவின் திட்டத்துக்கு அவள் எதிர்ப்புத் தெரிவித்திருக்கலாம். அல்லது குற்ற எண்ணத்தின் குத்தலைத் தாங்க மாட்டாமல் அதற்கு நம்பிக்கைத் துரோகம் செய்திருக்கலாம்.

''மனிதக் கொலைகளைச் செய்யத் திட்டமிடுபவன், அதன் ரகசியங்களை அதிகம் பேர் அறிவது ஆபத்து என்பதை அறிந்தவனாகவும் இருப்பான். மிகுந்த எச்சரிக்கையோடு செயல்படுவான். கோகிலாவிடம் சில உண்மைகளை மறைத்த குற்றவாளியினால் மோகனிடம் ஒளிக்க முடியவில்லை. ஏனென்றால், அவனுடைய உதவி அவனுக்கு அத்தியாவசியமாக இருந்தது. டிரங்க் பெட்டிக்குள் அடக்கம் செய்த பாலுவின் உடலை அப்புறப்படுத்த மோகனின் வண்டி தேவையாக இருந்தது.



கௌசிகன்

''உங்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்படலாம். 'ராமுவின் உடலைத் திராட்சைக்கொடி வீட்டின் நிலவறையில் புதைத்ததைப் போல் பாலுவின் உடலையும் அங்கு புதைக்காமல் அதை டிரங்க் பெட்டியில் வைத்துப் பார்சல் செய்வானேன்?' என்று. பட்டப் பகல் வேளையில், பண்ணையின் கூலியாட்கள் இங்குமங்கும்



# சுட்ட புண்கள்! வெட்டுக் காயங்கள்!
# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னல்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி



பர்னல் பட்டவுடனே சட்டென ஆற்றும். [illegible]



ஆற்றும் போதே இதம். [illegible]



[illegible]

வீடு என்றால் விபத்துக்கள் சேர்ந்தான் செய்யும். ஆடிக் களிக்கும் குழந்தைக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலே எந்த நேரத் திலும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னல்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னல், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னல்.

**பர்னல் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**






பூட்ஸ் ப்யூர் டிரக் கம்பெனி (இந்தியா) லிட்.

ASP/BJB-15 TM

நடமாடும்போது இன்னொரு புதை குழியை அங்கு தோண்டுவது சுலபமல்ல. இருட்டி எல்லாரும் உறங்கி ஊரடங்கியபின் செய்யலாமே? ஆனால் அதுவரை காத்திருப்பது விவேகமல்ல. இவ்வளவும் ஏன்? நடந்த உண்மையைக் கோகிலாவிடமிருந்து மறைத்தாக வேண்டும் என்ற அவசரமும் அவசியமும் வேறு. ஆகவே, எப்படியோ உடனே பாலுவின் சடலத்தை அப்புறப்படுத்தியாக வேண்டும். பாலுவின் சடலம் போலீஸ் அதிகாரியின் பார்வைக்குப் போக வேண்டும் என்பதும் கொலைகாரனின் திட்டம். ஆனால் அது எவ்வளவுக் கெவ்வளவு தாமதமாக நடைபெறுகிறதோ அவ்வளவுக்குப் போலீஸ் இலாகாவினரிடையே குழப்பமும் கூடும். பாலு அன்று மாலை 6.10 வண்டியில் சாமுண்டிக் கோட்டையிலிருந்து திரும்பிப் போக விருக்கிறான் என்ற செய்தி பரவி யிருந்தது. அந்தச் சிறிய ஊரில் அந்த மாதிரி ஒரு சின்னச் செய்தியைப் பரப்புவது அப்படியொன்றும் பெரிய காரியமல்ல. ஆகவே, பாலுவின் உடல் டிரங்க் பெட்டிக்குள் அடக்கம் செய்யப்பட்டு நர்ஸ் மோகனாவின் வண்டியில் வைத்து அதை ஒரு தார்பாலின் கொண்டு மூடி அப்புறப்படுத்தப்பட்டது. முதலில் அது இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தின் கார் ஷெட்டில் இறக்கப்பட்டுக் காளியப்பனின் வருகைக்காகக் காத்திருந்து பிறகு ரயில்வே ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்லப்பட்டது. பெட்டியின் மீது என் விலாசம் எழுதப்பட்டதும் பாலுவின் தந்தியும் மிகவும் சாமர்த்தியமான செயல்கள். போலீசாரின் கவனத்தைத் திசை திருப்பிக் குழப்புவதே கொலைகாரனின் இந்தத் திட்டங்களின் நோக்கம்.'' நடந்து முடிந்த ஒவ்வொரு சம்பவத்தையும் மறுபடியும் நினைவுபடுத்தி, அது எப்படி, ஏன், எதனால் என்று காரண காரியங்களோடு விளக்கிக் கொண்டு போனான் சேகர்.

''ஆனால் சேகர்.... பாலு கொல்லப்பட்டது?'' மஞ்சுளா தணிந்த குரலில் கேட்டாள். ''ராமுவின் உடல் திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையில் இருப்பதைக் கண்டு பிடித்து விடுவானோ என்ற அச்சத்தினால் மட்டுமல்ல என்று நீங்கள் முன்பு கூறினீர்களில்லையா?''

''உண்மைதான். திராட்சைக் கொடி வீட்டைச் சோதனையிட வந்த அவனைத் தீர்த்துக் கட்டுவதைத் தவிர வேறு யோசனைக்கே இடமில்லை கொலைகாரனுக்கு. ஒரு குறிப்பிட்ட கதவை அவன் திறக்க முற்பட்டிருக்கலாம். அல்லது திறந்தேகூட இருக்கலாம். ஆனால் அது நிலவறையின் கதவாக இருந்திருக்க முடியாது.....'' மர்மமான முறையில் பேசினான் சேகர்.

''என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை சேகர்....'' என்றாள் மஞ்சுளா.

''நான் சொல்லப் போகும் பூரா விவரங்களையும் கேட்கும் போது உனக்கு எல்லாமே விளங்கிவிடும். அன்று இரவு நிர்மலா வேப்ப மரத்துப் பங்களாவுக்கு வந்தது நம்மோடு பேசுவதற்காக மட்டுமல்ல. அவள் இங்கு வந்ததற்கு வேறொரு காரணமும் இருந்தது. அதைக் குறிப்பாக நமக்கு உணர்த்தவும் விரும்பினாள் அவள். நம்மிடமிருந்து விடைபெறுவதற்கு முன்பாக அவள் கூறிய வார்த்தைகளை நினைவுபடுத்திப் பார். ராமுவின் மீது சுமத்திய பழியைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'இதன் பின்னால் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது. அது என்ன என்பதைக் கண்டு பிடிக்காமல் விடப் போவதில்லை நான். எல்லாவற்றுக்கும் மேலாக, இந்த விஷயத்தில் எனக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமானால் அவரை....' என்று கூறிக் கொண்டு வரும் போது டெலிபோனில் உன் சித்தியிடமிருந்து நமக்குச் சாப்பாட்டுக்கு அழைப்பு வந்து, அவள் பேச்சைத் தடைப்படுத்தி விட்டது. இல்லையா ? அவள் சொல்ல வந்த விஷயம் இதுதான். 'எனக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமானால் அவரைச் சந்தித்து (அவரை என்றால் உன் அப்பாவை. அவளது எஜமானரை) 'அன்றிரவு ராமு உங்களைச் சந்தித்தானா? டிராக்டர் விற்ற பணத்தைக் கொடுத்தானா?' என்று நேரடியாகக் கேட்டுவிட வேண்டும் என்ற முடிவோடுதான் அவள் முல்லைவாசலுக்கு வந்திருக்கிறாள்.

''இந்த விஷயம் அவளுக்கு மிக முக்கியமானது. புயல் வீசிய அன்று மாலையிலிருந்து உன் அப்பாவைப் பார்ப்பதற்கு அவள் அனுமதிக்கப்படவில்லை. அதன் காரணம் நமக்கு இப்போது தெரியும். கந்தசாமி உயிரோடு இல்லை. இறந்து விட்டிருந்தார். ஆனால் அந்த உண்மை அவளுக்குத் தெரியாது. மூன்று வாரங்களுக்கு முன்னர் வீசிய புயலின் போது — அன்றிரவு ராமு பங்களாவுக்கு வந்திருந்தான் என்பதைக் கந்தசாமியினால் நிச்சயமாகக் கூற முடியுமானால் ராமுவைத் தேடும் முயற்சிக்கு வெளிச்சமூட்டி ஒரு வழி ஏற்படுத்திக் கொடுத்தது போலாகும். அது மட்டுமல்லாமல் உறக்கமும் விழிப்புமற்ற தொரு நிலையில் தான் உணர்ந்ததாகக் கூறும் எந்த ஒரு சில அநுபவங்களுக்கு இன்ஸ்பெக்டர் மதிப்பளிக்கவில்லையோ அவைகளுக்கு; அந்தக் கனவு கண்டது போன்ற அன்றைய இரவின் தன் நினைவுகளுக்கு ஒரு முக்கியத்துவம் ஏற்படும் என்றும் நினைத்தான்

நிர்மலா. கந்தசாமி அவர்களின் பாதுகாப்புப் பொறுப்பிலிருந்து கோகிலா தன்னை விலக்கியது நியாயமில்லாதது என்றும் கருதினாள் நிர்மலா. ஆகவே கோகிலாவுக்குத் தெரியாமல் உன் அப்பாவைப் பார்த்து விடுவது, உண்மைகளை அவர் மூலம் ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளுவது என்ற முடிவோடுதான் அவள் அன்று முல்லைவாசலுக்கு வந்திருக்கிறாள். நம்மைச் சந்தித்தபின், நாம் சாப்பாட்டுக்குப் பிரதான பங்களாவுக்குக் கிளம்பிச் சென்ற பின், அவள் ஓசைப்படாமல் பிரதான வீட்டினுள் புகுந்து மாடிக்குப் போயிருக்கிறாள். அங்கு உன் தகப்பனாரின் அறையில் அவள் கண்ட காட்சியே அவள் தன் உயிரை இழப்பதற்குக் காரணமாகி யிருக்கிறது. எந்த ஓர் உண்மையை முதன் முதலில் கண்டதினால் ராமுவை மரணம் தழுவியதோ அதே பயங்கர உண்மையை இவளும் காண நேர்ந்தது. அதே கதி இவளுக்கும் ஏற்பட்டது.

'' 'அவன் அவளுடைய உடைகளைக் களைந்து கொண்டிருந்தான்' என்று குமுறிய நிலையில் நிர்மலா கூறினாள் அல்லவா? ஒரு மனிதன் ஒரு பெண்ணின் ஆடைகளைக் களைவதைப் பார்த்த அந்த ஒரு காரணத்துக்காக மட்டும் அவள் கொல்லப்படவில்லை. தன் ஆடைகளை இழந்து நின்றவள் புதிய நர்ஸ் மோகனா என்பதை நிர்மலா கண்டாள். அந்தக் கேவலமான காரியத்தைச் செய்தவனோ? எந்த ஒரு மனிதனும் உடலாலோ உள்ளத்தாலோ அந்தச் செயலைச் செய்ய முடியாதோ அவராக அவனே அங்கு கண்டுவிட்டாள் நிர்மலா. அந்த உண்மையே அவள் உயிரைக் குடித்தும் விட்டது!''

சில நிமிஷங்களுக்கு அங்கு மௌனம் குடிகொண்டது. அதைக் கலைத்து மிக மிகத் தாழ்ந்த குரலில் மஞ்சுளா கூறினாள். ''இப்போது நான் எல்லாவற்றையும் புரிந்து கொள்ள ஆரம்பிக்கிறேன்.''

''நேற்று இரவு காளியப்பன் கொலைப் பட்டதும் இதே காரணத்துக்காகத்தான்'' என்றான் சேகர். ''ராமு, நிர்மலா இவர்களின் உயிரை எந்த ஓர் உண்மை குடித்ததோ ; எந்த ஓர் உண்மையைப் பாலு கண்டு பிடித்தானோ அல்லது இன்னும் சில நிமிஷங்கள் அவனை உயிரோடு விட்டிருந்தால் எந்த உண்மையை அவன் கட்டாயம் கண்டிருப்பானோ அதே உண்மையை, காளி திராட்சைக் கொடி வீட்டைக் கண்காணித்து வந்த போது அறிந்திருக்கிறான். இருபத்திரண்டு தினங்களுக்கு முன்பு இறந்த உன் தகப்பனார் கந்தசாமியின் உடலைத் திராட்சைக் கொடி வீட்டிலிருந்து பிரதான வீட்டுக்கு மறுபடியும் கொண்டு செல்லப்படுவதைக் காளியப்பன் பார்த்து விட்டான்.''

''அப்படியானால் அத்தனை நாட்களாக அப்பாவின் உடல் அந்தத் திராட்சைக் கொடி வீட்டில்தான் இருந்ததா?'' நெஞ்சடைக்கக் கேட்டாள் மஞ்சுளா.

''அங்குதானிருந்தது. உன் அப்பாவைத் தவிர வேறு இரண்டு பேருடைய சடலங்கள் நிலவறையில் கச்சிதமாகப் புதைக்கப்பட்டிருந்தன. அது போல உன் அப்பாவின் சடலத்தைப் பங்கிடு செய்யவில்லை. செய்யக் கூடாது நிலை. அதனால்தான் உன் சித்தி கோகிலாவும் உன் மாமா ரகுநாத்தும் திராட்சைக் கொடி வீட்டிலிருந்து நாம் விலகி இருப்பதில் அத்தனை கவனம் காட்டினார்கள். அவர்கள் இருவருக்கும் தெரியும், அந்த உண்மை'' என்று கூறிய சேகர் டாக்டரைப் பார்த்து, ''அன்றிரவு நாங்கள் திராட்சைக் கொடி வீட்டினுள் நுழைந்திருப்போமானால், டாக்டர் ரகுநாத் நாங்கள் எந்தக் காட்சியை அங்கு கண்டிருப்போம்? மஞ்சுளாவின் அப்பா உயிரற்ற சவமாகப் படுக்கையில் கிடத்தப்பட்டிருப்பார்; பிரிஜ்ஜில் வைத்திருந்த பொருளை வெளியில் எடுத்து வைத்தால் எப்படி அதன் மீது நீர்த் துளிகள் கசிந்து வடியுமோ அப்படிக் கந்தசாமியின் உடலிலிருந்து நீர் முத்துக்கள் வடிந்தவண்ணம் இருந்திருக்கும்..... இல்லையா டாக்டர் சார்?'' சேகரின் குரல் சவுக்காக ரகுநாத்தைச் சுண்டி இழுத்தது. டாக்டர் தம் இருக்கையில் புழுவாக நெளிந்து குறுகிப் போனார். அவர் பின்னால் கோபால் ராட்சதனைப் போல் நின்று கொண்டிருந்தான். சேகர் தன் காதலியின் முகத்தை வாஞ்சையோடு பார்த்தான். அவள் பார்வை அவன் மீதுதான் ஒட்டிக் கொண்டிருந்தது.

''மீதி விஷயங்களைக் கேட்க நீ இன்னமும் விரும்புகிறாயா மஞ்சுளா?'' என்று கேட்டான் சேகர்.

''இனி என்னால் எந்த அதிர்ச்சியிலிருந்தும் தப்ப முடியாது சேகர். நான் முழு உண்மையையும் அறிந்து கொள்ளவே விரும்புகிறேன்'' என்றாள் மஞ்சுளா. சேகர் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தான். அவன் முகத்தில் இலேசான வேதனை கவிந்தது. எதையோ தவிர்க்க முயன்றான். அப்போது ஏற்பட்டது அந்தக் குறுக்கீடு? அதை அவன் ஆவலோடு விரும்பி வரவேற்றான். இருள் கவிந்திருந்த எதிர்ப்புற அறையில் காலடி ஓசைகள் கேட்டன. பின் பக்கத்திலிருந்த மாடிப் படிகளில் யாரோ இறங்கி வரும் அரவம். சில விநாடிகளில் அங்கு மோகனா தோன்றினாள்.

''என்ன அந்த ஆளைக் காணோமே! சுரேஷ் ஏன் மெக்கானிக்கை அனுப்பவில்லை...? எதற்கும் நான் மறுபடியும் டெலிபோன் செய்து பார்க்கிறேன்'' என்று அவர்களைத் தாண்டி அந்த ஹாலின் எதிர்க் கோடியில் இருந்த டெலிபோன் அருகே போக முயற்சி செய்தாள் மோகனா.

ஆனால், தன் வாக்கிங் ஸ்டிக்கைக் குறுக்கே நீட்டி — தற்செயலாக நீட்டுவது போல நடித்து — அவளைத் தடை செய்து நிறுத்தினான் சேகர். ''மோகனா, உண்மையாகவே இங்கிருந்து போக வேண்டும் என்று நீ அவசரப்படுவதானால் என்னால் உனக்கு உதவ முடியும் என்று நினைக்கிறேன். என் சிறு வயதில் நான் சில காலம் ஆட்டோ மெக்கானிக்காக இருந்திருக்கிறேன். அதில் என்னை ஒரு ஜீனியஸ் என்றுகூடச் சில அசடுகள் பாராட்டி இருக்கின்றன'' என்றான் சேகர்.

''அப்படியா? நிஜமாகவா?'' மோகனாவின் பெரிய விழிகள் வியப்பால் மின்னின. ''அப்படியானால் கொஞ்சம் எனக்கு உதவுங்களேன்?'' ஒய்யாரமாகக் கெஞ்சினாள் அவள்.

''மகிழ்ச்சியோடு உதவுகிறேன்...'' என்று கூறி எழுந்தவன் மற்றவர்களைப் பார்த்து




# கிளீயர்டோன்-உன்னத மின்சார சாதனங்கள்

கிளீயர்டோன் எல்லாவித மின்சார சாதனங்களுக்கும் ஈடற்ற பேர் பெற்றது. அனைத்துமே கம்பீரம், உறுதி, நீடித்த உழைப்பு ஒருங்கிணைந்தவை. நாடெங்கிலுமுள்ள பல்லாயிரம் இல்லத்தரசிகளின் பாராட்டுப் பெற்றவை. ஒவ்வொரு தயாரிப்பும் ஆண்டுக் கணக்கான அனுபவ நுட்பத்தையும், தொழில் நுணுக்கத்தையும் பின்னணியாகக் கொண்டவை.
உங்கள் இல்லங்களுக்கேற்ற கிளீயர்டோன் மின்சார சாதனங்களையே வாங்குவீர். அது நீங்கள் அளிக்கும் பணத்திற்கும் பன்மடங்கான பலனையே தருகிறது.
நாடு பூராவும் உள்ள 1500-க்கும் அதிகமான கிளீயர்டோன் விற்பனையாளர்கள், விற்பனைக்குப் பின்னும் எப்போதும் சேவைசெய்ய காத்திருக்கிறார்கள்.

இஸ்திரி பெட்டிகள்

ஹாட் பிளேட்கள்

சுபரீம் கெட்டில்கள்

பேக்கிங் ஓவன்கள்

பிரஸ் லிப்ட் டோஸ்டர்கள்

குக்கிங் ரேஞ்சுகள்

ஜாஸ்பான் கெட்டில்கள்

வாட்டர் ஹீட்டர்கள்

வாட்டர் பாய்லர்கள்

ஹாட் ஃபுட் கேபினட்கள்

சுவர்க் கடியாரங்கள்

**நேஷனல் ரேடியோ அண்டு எலக்ட்ரானிக்ஸ் கம். லிட்**
(ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் பிரிவு) பம்பாய்-கல்கத்தா-டெல்லி-சென்னை-

ULKA KL-3.

"இதோ சில நிமிஷங்களில் வந்து விடுகிறேன்" என்று கூறியவன் கோபாலிடம் பார்வையால் அந்தச் சூழ்நிலையைக் கலக்காமல் கண்காணிக்கும்படி கட்டளையிட்டு விட்டுக் கிளம்பினான்.

வெளியே மழை இன்னும் பெய்து கொண்டுதான் இருந்தது. மழைச் சாரல் இருவர் மீதும் வாரியடித்தது. சேகர் அவனுடைய காரின் பானட்டைத் திறந்த போது அவன் மிக ஆர்வத்துடன் அவனோடு சேர்ந்து அந்த யந்திரத்தை நோக்கினான். டார்ச் வெளிச்சத்தில். பெட்ரோல் சப்ளையில் குறைபாடு இல்லை என்பதை அவனுக்குச் சொன்னான் சேகர். இக்னிஷன் தொடர்பைப் பரிசோதிக்க வேண்டும் என்றும் அவன் உள்ளே டிரைவர் ஆசனத்தில் அமர்ந்து உதவ வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான். அதன்படியே அவன் ஓட்டுநர் ஆசனத்தில் போய் அமர்ந்து கொண்டான். சேகரிடமிருந்து உத்தரவுகளை எதிர் பார்த்துக் காத்திருந்தான்.


சாப்பிட்டவர்: காப்பி என்ன பொடியில் போடுறீங்க? மூக்குப் பொடியிலா?

முதலாளி : பெரிய ஜோக் சொல்லிவிட்டதாக நினைக்காதீங்க. 60ம் பக்கத்தைப் போய்ப் பாருங்க.

சேகரின் செயலை வண்டியின் பானட் மறைத்துக் கொண்டிருந்தது. ஆகவே, அவன் செய்யும் காரியம் அவனுக்குத் தெரியாது. 'டிஸ்டிரிபூடர் கேப்'பைக் கழற்றினான். கை காரியத்தைச் செய்யும் போது அவன் வாய் சும்மா இருக்கவில்லை. "மோகனா, நீ இப்படி வெளியூர் கிளம்பிப் போவது இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்துக்குத் தெரியுமா?" என்று கேட்டான். "கிரிமினல் வழக்குகளின் சாட்சிகள் அந்த எல்லையை விட்டு வெளியேறக் கூடாது என்று பொதுவாக ஒரு நியதி உண்டு. அது தெரியுமா உனக்கு?"

"நான் இரண்டொரு நாளில் திரும்பி விடுவேன். எனக்குத் தெரிந்த விவரங்களையெல்லாம்தான் நான் அவரிடம் கூறிவிட்டேனே. அவையெல்லாம் அப்படியொன்றும் அத்தனை முக்கியமானதும் இல்லை."

"முக்கியமானதில்லையா?" சேகர் தன் பேச்சில் சுவாரசியத்தைக் கூட்டினான். "நிர்மலா கொல்லப்பட்ட அன்றிரவு முல்லைவாசல் பண்ணை பிரதான பங்களாவின் மாடி வராந்தாவின் கீழ் டாக்சி டிரைவர் காளியப்பன் பதுங்கிப் போனதை நீ பார்த்ததாகக் கூறியிருக்கிறாய். இது சாதாரண விஷயமா? அவனது டாக்சியின் பின் சீட்டடியில் நிர்மலாவின் கைப் பை இருந்ததை விட, அவனது சாவிக் கொத்தில் திராட்சைக் கொடி வீட்டின் தலை வாசல் சாவி இருந்ததை விட நீ கூறிய செய்தி குறைந்த மதிப்புடையதா? இல்லவே இல்லை!"

"அப்படியா?" போலியான வியப்பு அவனது வார்த்தைகளில் வழிந்ததை உணர்ந்தான் சேகர்.

"அப்படியானும் இன்ஸ்பெக்டர் என்னை அழைப்பதற்குள் நான திரும்பிவிடுவேன."

"இந்தப் பிரயாணத்தில் நீ மட்டும்தான் போகிறாயா?"

இதற்கு அவனிடமிருந்து உடனே பதில் வரவில்லை. சேகரும் இந்தச் சம்பாஷணையின் ஊடே தன் கோட் பாக்கெட்டில் கழற்றிப் போட்டிருந்த மோட்டார் பாகத்தை மெதுவாக எடுத்து அதன் இடத்தில் பொருத்தி விட்டான்.

"தனியாகத்தான் போகப் போகிறேன்" என்றான் மோகனா சிறிது நேரம் கழித்து.

"எங்கே வண்டியைக் கிளப்பு பார்க்கலாம்" என்றான் சேகர், பானட்டைப் படார் என்று மூடிக் கொண்டே. மோகனா மோட்டாரைக் கிளப்பியதுமே அது துடிப்போடு இயங்கியது. அவன் முகத்தில்தான் எத்தனை மகிழ்ச்சி?

"கில்லாடிதான்... ம்.. அது சரி. நீ உடனே இப்போதே கிளம்பப்போகிறாயா?" என்று கேட்டான் கைகளைத் துடைத்துக் கொண்டே சேகர்.

"ஆமாம். இன்னும் சில நிமிஷங்களில் கிளம்பி விடுவேன். மாடியில் என் உடைமைகள் சில இருக்கின்றன. அவைகளை எடுத்துக் கொண்டு புறப்பட வேண்டியதுதான். உங்கள் உதவிக்கு ரொம்ப ரொம்ப வந்தனம்" என்றான் மோகனா.

"இது என்ன பெரிய உதவி?" என்று அலட்சியமாகச் சிரித்தவன் காரின் பின் சீட்டைப் பார்த்தபடியே "இந்தப் பிரயாணத்தில் டிரங்க் ஒன்றும் இல்லையா?" என்றான்.

"டிரங்கா?.... என்னிடம் அப்படி ஒன்றும் இல்லையே..." என்றவன் தன் இருக்கையிலிருந்து வெளிப்பட முயன்றான். அதே சமயம் அவன் வெளி வர முடியாமல் கதவைத் தன் கைகளால் அழுத்திக் கொண்டே பேசினான் சேகர். மழைநீர் வழியும் அந்த முகத்தில் சுடர் விட்ட பொருள் பொதிந்த புன்முறுவலை அந்த மங்கலான வெளிச்சத்திலும் இனங் கண்டுகொள்ள முடிந்தது மோகனாவால்.

"மோகனா, நீ வெறும் கவர்ச்சிக் கன்னி என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் ரொம்ப கெட்டிக்காரியும் கூட" என்றான் சேகர்.

"நிஜமாகவா சேகர் சார்?" கிறுங்க வைக்கும் சிரிப்பை வழிய விட்ட மோகனா. "கெட்டிக்காரி என்று சொல்கிறீர்கள்? எதைக் கொண்டு இம் முடிவுக்கு வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"உன் கூட்டாளிகளையெல்லாம் மிஞ்சி விட்டாய் நீ பொய் சொல்வதில்."

மோகனாவின் முகத்தில் அந்தச் சிரிப்பு எங்கோ ஓடி ஒளிந்து கொண்டு விட்டது. "நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்குப் புரியவேயில்லை. உங்களோடு நான் கொஞ்சம் தாராளமாகவே பேசிவிட்டேன்" என்றாள் மோகனா.

(தொடரும்)



SOVAN/OCL/7112




சக்தியென்ற வெறிகொண்டு
  சகத்தையெல்லாம் தனதாக்கிப்
பக்தியென்ற உபாயத்தால்
  பற்றியதெல் லப்பற்றால்
முக்தியென்ற நேரேறி
  யோகநெறி உழைப்பென்ற
முக்தனவன் பாரதியின்
  முழுப்பெருமை சாற்றரிதே!

அம்பிகையைச் சரண்புகுந்தால்
  அதிகவரம் பெற்றிடலாம்,
நம்பினவர் கெடுவதில்லை,
  நான்மறையின் தீர்ப்பென்றே
உம்பருடை நாடடைந்த
  உயர்ந்தகவி பாரதியும்
அம்புவியில் வாழ்ந்ததுண்மை!
  அவன்பெருமை புகலரிதே!

அகிம்சையினைப் போதித்த
  அரும்புத்தன் இவன்தானோ?
பகைவனுக்கும் அருள்கென்ற
  பரமேசு இவன்தானோ?
தகவுடைய கருமநெறி
  சமரச நூக்குரைத்த
புகழ்கண்ணன் இவன்தானோ?
  யோகசக்தி இவன்தானோ?

இளம்பிறையை அணிந்திட்ட
  எழில்மோனச் சிவன்இவனோ?
உளம்உருகித் தொழச்சொன்ன
  உயர்நபியும் இவன்தானோ?
வளம்மிகுந்த நாயன்மார்
  மால்அடியார் இவன்தானோ?
விளங்குமிந்த வண்ணமெலாம்
  மேவுகின்றான் பாரதியே!

பார்க்கின்ற காக்கையிலே
  பரந்தாமன் நிறம்கண்டான்!
பார்க்கின்ற பக்ஷியிலே
  பகவானைத் தான்கண்டான்!
சார்க்கின்ற பொருளிலெல்லாம்
  இறைவனையே கண்டுநின்றான்!
பார்முழுதும் தெய்வமதைப்
  பார்த்துநின்றான் பாரதியே!

முருகனையும் அவனுக்கு
  மூத்தகண நாதனையும்
அருளொளிரும் சக்தியையும்
  ஆடுகின்ற காளியையும்
திருவினையும் கலையினையும்
  தெய்வமணக் கண்ணனையும்
பெருகுகின்ற காதலுடன்
  பேரிசைத்துப் பாடினனே!

கறுப்பினையே அகம்வைத்துக்
  காட்சிக்குத் தாசரைப்போல்,
வெறுப்பினையே உள்ளடக்கி
  வெளிச்சிரிப்புச் சிரிப்பவர்போல்
உறுப்பனைத்தும் பொய்மறைக்க
  ஒருபோதும் பாரதிதான்
சிறப்பிழந்து வாழாது
  சீர்தெய்வ நெறிநின்றான்.

தெய்வம் நமக்குத் துணையென்றும்
  தீங்கு வரமாட் டாதென்றும்
தெய்வக் கனல்தான் மிகவிளைந்து
  தினமும் நம்மைக் காக்குமென்றும்
தெய்வம் இருக்கு தடியென்றும்
  தெய்வ மணிக்கை அணையென்றும்
தெய்வ பக்தித் திடம்கொண்ட
  தீரன் பார திக்கிணையார்?

— என். எஸ். சிதம்பரம்





# மதுபானம் ஒரு பகாசுரன்

ஏகசக்கிரபுரத்தில் பகாசுரன் என்ற ஒரு நரமாமிச பக்ஷிணி இருந்தான். அவன் எதேச்சையாய் ஜனங்களை வருத்தியும் கொன்றும் வந்தான். இவனுடைய கொடுமையை ஒருவாறு வரையறுத்துத் தணிக்க ஊர் அதிகாரிகள் அவனிடம் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அதாவது தினம் தவறாமல் சாப்பாட்டு வேளைக்குள் அவன் இருப்பிடத்துக்கு ஒரு வண்டி சோறு அனுப்புவது. சோற்றுடன் வண்டி இழுத்த இரண்டு மாடுகளும் ஓட்டின ஆளும் அரக்கனுக்கு இரையாக வேண்டியது. இம்மாதிரி ஊரில் உள்ளவர்கள் ஒருவர் பின் ஒருவராய்ப் பகாசுரனுக்கு இரையானார்கள்.

இக்கதையை மகாபாரதத்தில் படிக்கலாம். மதுபானம் பகாசுரனைத் தவிர வேறில்லை. நமது சென்னை மாகாணத்தில் 'இன்று மதுபானத்துக்கு ஏழை மக்கள் செலவு செய்யும் பணத்துக்கு அரிசி வாங்கினால் ஜில்லா ஒன்றுக்கு ஆயிரம் மூட்டை அரிசியாகும்.' ஒவ்வொரு ஜில்லாவில் ஒரு பகாசுரன். அவனுக்கு நபர் ஒன்றுக்கு ஆயிரம் மூட்டை அரிசி. ஜில்லாவாசிகளுள் சோற்றுக்கு இல்லாத தொழிலாளர்கள் தங்கள் பெண்டு பிள்ளைகளுக்கு உணவு குறைத்து எப்படியோ சேகரித்துக் கொண்டு போய்ப் போடுகிறார்கள். பகாசுரனைப் போலவே இந்தக் கள் அரக்கனும் சோற்றுடன் விடாமல் கொண்டு வந்த ஆட்களையும் பலியாகக் கொள்ளுகிறான். மதுபானத்துக்குக் குடும்ப வாழ்வும், ஒழுக்கமும் தேக ஆரோக்கியம், உயிர், ஆன்மா அனைத்தும் இரையாகிவிடுகின்றன. இந்தக் கலிகால ஏகசக்கிரபுர பகாசுரனை வதைத்து ஏழை மக்களுக்கு விடுதலை தர எந்தக் குந்தி புத்திரன் முன்வருவானோ!

பாரதத்தில் சொல்லாத சில விஷயங்கள் உண்டு. அதைச் சொல்லுகிறேன், கேளுங்கள். ''பகாசுரனை வதைத்துவிட்டு நகரவாசிகளை விடுவிக்கிறேன்'' என்று குந்தி தேவி சொன்னபோது முதலில் அவ்வூர்த் தலைவர்கள் ஆட்சேபித்தார்கள்.

''இந்த மகா பலசாலியான அரக்கனைக் கொல்லமுடியாது. பிறகு எதேச்சையாய் அட்டகாசம் செய்வான். ஒரு வரையறையுமின்றிப் போய்விடும். வீண் பிரயத்தனம் வேண்டாம். தவிர இவன் தொலைந்தால் வேறு அரக்கர்கள் வர மாட்டார்களா? இந்த நாடு அரக்கர்கள் நிறைந்த நாடு. ஒருவன் ஒழிந்தால் மற்றொருவன் வந்துவிடுவான். இவனைவிடக் கொடிய அசுரன் வந்தாலும் வருவான்.'' இம்மாதிரி குந்தி தேவியிடம் ஆட்சேபித்தார்கள்.

இப்படியேதான் பூரண மதுவிலக்குக்கும் ஆட்சேபம் சொல்லுகிறார்கள். ''திருட்டுக் கள் இறக்குவார்கள். வீடுகளில் சாராயம் காய்ச்சுவார்கள். வரை

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்





சூதாட்டக்காரர்களையும், மதுபான விற்பனையாளர்களையும் நகரத்திலிருந்து அரசன் வெளியேற்ற வேண்டும்.

— *மனு தரும சாஸ்திரம்*

மது சாரத்தினால் உடம்பு சுக மடைவது ஒரு போதும் நடவாத காரியம். இது மட்டுமன்று. மிகக் கொஞ்சமாக அருந்தினாலும் மது சாரத்தினால் தேக சுகம் கெடவே செய்யும். மதுபானம் செய்பவன் எவனும் பூரண தேகசுகத்துடன் இருக்க முடியாது.

— *ஸர் ஆண்ட்ரு கிளார்க்*
*விக்டோரியா மகாராணியின் வைத்தியர்*



யறை யில்லாமல் போய்விடும். எப்படியும் ஜனங்கள் குடிப்பதை விடமாட்டார்கள். வெளிநாட்டிலிருந்து மதுப் பண்டங்கள் தடை மீறி வந்துவிடும். இந்த வீண் பிரயத்தனம் வேண்டாம்'' என்கிறார்கள்.

மகா புத்திசாலிகளான ஏகசக்கிர புரத்தார் வேறு ஆட்சேபங்களும் எடுத்துக் காட்டினார்கள். ''பகாசுரன் கொடிய அரக்கன்தான். ஆனாலும் பாருங்கள். அவன் தினமும் ஒரு வண்டிச் சோறும், இரண்டு மாடுகளும் ஒரு வண்டிக்காரனுமாகப் பட்சித்து வருவதில் அவன் விஸர்ஜித்த மல மூத்திரம் குன்று போல் குவிகிறது. இது நம்முடைய வயல்களுக்கு நல்ல உரமாய் வருகிறது. இவன் இறந்துவிட்டால் பிறகு நமக்கு எரு ஏது? பண்ணைகள் எருவின்றிக் கெட்டுப் போகும். அவசரப்பட்டு முன் யோசனையில்லாமல் அசுரனை வதைத்துவிட்டால் நாம் எரு இல்லாமல் ஏமாந்து போவோம்'' என்று பலமான ஆக்ஷேபம் சொன்னார்கள்.

பார்த்தீர்களா? கள் வருமானம் போனால் அரசியல் எப்படி நடத்துவது? வருஷம் ஐந்தரைக் கோடி வருமானத்தைத் திடீர் என்று எப்படி விட்டுவிட முடியும்? என்று மதுவிலக்குக்குச் சொல்லும் அரசியல் பொருள் நிபுணரின் வாதம் அக்காலத்தில் ஏகசக்கிரபுரத்திலும் இருந்தது. பகாசுரனுடைய மலமூத்திரத்தைக் கொண்டு ஏகசக்கிரபுரத்தார் தங்கள் பண்ணைகளுக்கு எரு இட்டுப் பயிர் செய்யக் கற்றுக்கொண்டு, அந்த நல்ல உரம் இல்லாவிடில் வேறு வழி என்னவென்று திகைத்தார்கள். வண்டி சோறு போனாலும் போகிறது; ஒரு கூடை எரு மிச்சம் வருகிறது பார் என்றார்கள்!

அவலக்ஷண உவமை! இப்படியும் எழுதலாமோ என்றிவ்வாறு இதைப் படிக்கும் சாதுக்கள் சொல்வார்கள். உவமை துர்க்கந்தமானதுதான், ஒப்புக் கொள்கிறேன். ஆனால் கள் சாராயத்திற்கும், அவைகளைக் கொண்டு குடும்பங்களை அழித்துப் பெண்டு பிள்ளைகள் கண்ணீர்விடச் செய்வதற்கும் இவற்றுக்குப் பாழாக்கின சொத்தில் ஒரு பங்கு எச்சிலைக் கொண்டு காரியம் நடத்துவதற்கும் வேறு என்ன சுகந்த உவமையைச் சொல்லுவேன்? இன்னும் கேளுங்கள்!

# தலைமயிர் விற்ற காசி ராஜா



காசி ராஜ்யத்தை ஒரு காலத்தில் அசுரர்கள் பிடித்துக் கொண்டு அசுரர் வைசியனை விருஷபருவனிடம் காசி ராஜ்ய பரிபாலனத்தை விட்டுப் போனார்கள். அவன் குடிகளைப் பாது காக்கத் திறமையற்றவன். நகரம் முழுவதும் பெருமாரி வியாதி கண்டு லக்ஷக் கணக்கான ஜனங்கள் இறந்தார்கள். கங்கைக் கரையில் பிணங்கள் ஏராளமாய்க் குவிந்து ஆயிரக் கணக்கான ஸ்திரீகள் விதவையானார்கள். வழக்கம்போல் முண்டனம் செய்து கொண்ட கைம்பெண்களின் தலைமயிர் மலைபோல் குவிந்தது. இதைக் கண்ட அரசன் குவிந்த தலைமயிரை யெல்லாம் சேகரித்து ஏலத்தில் விட்டுப் பிறகு வியாதி என்றும் விடாது என்று தீர்மானித்து, வருஷம் ஒரு முறை முன்னடியே முண்டன மயிர் எடுத்து விற்கும் உரிமையை ஏலத்தில் விட்டு அரண்மனைச் செலவுக்கு நல்ல வருமானம் ஏற்படுத்திக் கொண்டான். அந்த வருமானம் தடை குறையின்றி இராஜ பொக்கிஷத்துக்குச் சரியாக வந்து சேரத் தகுந்த முறைகளையும் விதித்துப் பகிரங்கப்படுத்தினான்.

காசி நகர வைத்தியர்களோ ஒரு சபை கூடிப் பெருமாரி வியாதிக்கு மருந்து தேடத் தீர்மானித்து மலையும் காடும் திரிந்து ஒரு நல்ல ஔடதம் செய்து விருஷபருவனிடம் சென்று அதை நகரவாசிகளுக்கு வழங்கும்படியாய்க் கேட்டுக்கொண்டார்கள். அரசன் கூடாதென்றான். ''வியாதியைத் திடீர் என்று நிறுத்தி விட்டால் முண்டன மயிர் வருமானம் போய்விடும். பிறகு அரண்மனைச் செலவுக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று தன் அமைச்சர்களைக் கேட்டான். அவர்களும் ''மகாராஜாவே! தாங்கள் சொல்லுவது உண்மை!'' என்று தலை சாய்ந்தார்கள்.

இக்கலால் வருமானத்துக்குப் பெயர் முண்டன வரும்படி என்று வைக்கலாமா? அல்லது பகாசுரன் எரு என்று சொல்லலாமா? இரண்டும் பொருந்தும். மயானத்தில் நாதனை இழந்து துக்கம் தீர மாரை அடித்துக் கொண்டும் கண்ணீர் விட்டு அழுது புரண்டும் தலை மயிரைக் களைந்து எறிந்த கைம்பெண்களின் துக்கம் காசி ராஜனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. மயிர் விற்பனை வருமானம் போய்விட்டால் வழி என்னவென்று திகைத்தான். கலால் வருமானமும் ஸ்திரீகளின் துக்கத்தில் முளைத்துக் கண்ணீரில் நனைந்த வருமானமே.

(ராஜாஜி 28-5-1925 'நவசக்தி'யில் எழுதியவை; ஆசிரியர் : திரு.வி.க.)

போதைப் பொருள்கள் அசுத்தம்; தீண்டத்தகாதவை, சைத்தானின் சாதனங்களாம். க்ஷேமமாக இருக்க வேண்டின் அவை ஒதுக்கப்பட வேண்டும். மது வகையினால் பெறக்கூடும் சந்தோஷம் சிறிது: தீமையோ பெரிது.

— குர் ஆன்



நன்றி: குமரி மலர்; விரோதிஇதழ், ஆடி.




☐ இக்குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

☐ தஞ்சாவூரில் அரசினர் கலைக் கல்லூரி ஒன்றைத் திறந்து வைத்துப் பேசுகையில் தமிழக முதல்வர் மாணவர்களை அரசியலில் ஈடுபட வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டதாகப் பத்திரிகைகளில் வெளியான செய்தி கண்டு வியப்புற்றேன். 'திராவிட மாணவர் முன்னேற்றக் கழகம்' என்ற பெயரில் இயங்கி வரும் மாணவர் ஸ்தாபனம் எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தது என அறிய விரும்புகிறேன். மேலும் இதே முதல்வர்தான் ''பள்ளிகளிலும் தி. மு. க.வின் கிளைகளை ஆரம்பிக்க வேண்டும்'' என்று சில மாதங்களுக்கு முன் கூறினார். சமீபத்தில் நடந்து முடிந்த தேர்தலில் மாணவர்கள் தேர்தல் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசியதையும் அவர் எந்த விதத்திலும் கண்டிக்கவில்லை. 'அரசியல்' என்று அவர் குறிப்பிடுவது வேறு ஏதாவது பொருளா? அல்லது தி. மு. கழகம் தவிர வேறெந்த கட்சியின் பணியிலும் ஈடுபட வேண்டாமெனக் கூறுகிறாரா?

சென்னை—8
17—8—71 ஆர். பார்த்தசாரதி

கடந்த 3—8—71 அன்று எங்கள் ஊருக்குப் பொதுப்பணித் துறை அமைச்சர் சாதிக் பாட்சா அவர்கள் வந்தார். ஒரு பொறுப்பு மிக்க பதவியில் உள்ளவர் அவரது துறையைப் பற்றியோ அதில் ஏற்பட்டுள்ள பிரச்னைகளைப் பற்றியோ அவற்றைச் சமாளிக்க அவர் எடுத்துக்கொண்டுள்ள முயற்சிகள் பற்றியோ பேசுவார் என எதிர்பார்த்துத் தங்கள் பொன்னான நேரத்தையும் செலவழிக்கக் காத்திருந்த பொது மக்களுக்குப் பெருத்த ஏமாற்றம். அவர் அரைத்துப் புளித்த மாவையே திரும்பவும் அரைத்து விட்டுச் சென்று விட்டார்.



கடந்த தேர்தலில் அவர்கள் கட்சி கோவையில் அத்தனை இடங்களைப் பெற்றது, சென்னையில் இத்தனை இடங்களைப் பெற்றது என்று வாய் கிழிய ஒன்பது நிமிடங்கள் பேசி விட்டுக் கடைசி நிமிஷத்தில் காவேரிப் பிரச்னையைப் பற்றி நமது அரசு வழக்குத் தொடர விருக்கிறது என்று கூறினார். அவர் பேசிய பேச்சுக்களால் அவருக்கோ அதைக் கேட்டுக் கொண்டிருந்த மக்களுக்கோ ஏதேனும் நன்மை உண்டா?

பொறையார்,
8—8—71 எஸ். புருஷோத்தமதாஸ்

நூலகம் என்பது அறிஞர்களோடு மானசீகமாய்ப் பேச உதவி புரியும் அருமையான இடம் ஆகும். ஆனால் தற்போது அரசியல் தலைவர்களோடு 'பேச' உதவி செய்து கொண்டிருக்கின்றன. நூலகங்களில் இலக்கிய ஏடுகளின் எண்ணிக்கை குறைந்து விட்டன. ஆனால் அரசியல் ஏடுகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே இருக்கின்றன. அரசு நூலகங்களில் இலக்கியப் பத்திரிகைகள் நிறுத்தப்பட்டு அரசுச் சார்புள்ள கட்சி ஏடுகளும், கட்சிப் பிரசாரம் செய்யும் பத்திரிகைகளும் போடப்பட்டு வருகின்றன.

'அரசியல் பேசாதீர்கள்' என்ற அறிவிப்புப் பலகை மட்டும் தெள்ளத் தெளிய வாசலில் தொங்குகிறது. ஆனால் அரசியல் பேச்சை உண்டுபண்ணும் — தொடக்கம் பண்ணும்— ஏடுகள் அங்கு காணப்படுகின்றன.

ஒக்கூர்,
8—8—71 பொன். சௌந்திரன்

ஆகஸ்ட் மாதம் மூன்றும் வாரம் சேலம் மாவட்ட நலநிதிக்காக மாவட்டம் முழுதும் அரசாங்க அதிகாரிகள் மூலமாகப் பொதுமக்களிடமும் அரசாங்க ஊழியர்களிடமும் நன்கொடை மொத்தம் ரூபாய் ஆறு லட்சம் வசூல் செய்யப்பட்டது. ரூ. 500, ரூ. 250, ரூ. 100, ரூ. 50, ரூ. 25, ரூ. 10 என்று பலவாறு வசூல் செய்யப்பட்டது. இந்த நன்கொடை கொடுத்தவர்களுக்குச் சேலம் பொருட்காட்சி நேரு கலையரங்கில் நடிகர் சுந்தரராஜன் நடித்த நாடகம் ''ஞான ஒளி'' பார்ப்பதற்காக டிக்கெட் (நன்கொடை ரசீதிலேயே) கொடுக்கப்பட்டது. நாடகத்தன்று கலையரங்கில் எவ்வளவு பேர் உட்கார முடியுமோ அதைவிட மூன்று மடங்கு கூட்டம் வந்திருந்தது. இதனால் டிக்கட் வாங்கியவர்களில் ஒரு பகுதியினர்தான் நாடகம் பார்க்க முடிந்தது.

மேலும் நாடகம் பார்த்தவர்களுக்கும் சரிவர இடவசதி, இருக்கை செய்து கொடுக்கப்படவில்லை. இடவசதிக்குத் தக்கவாறு டிக்கெட்டுகள் விற்பனை செய்திருக்கலாம். அல்லது அதிகமாக டிக்கட்டு விற்பனை ஆகியிருந்தால் இரண்டு அல்லது மூன்று நாட்கள் தொடர்ந்து நாடகம் நடத்தி அனைவரும் பார்க்க வசதி செய்திருக்கலாம். இவ்வாறு முன்யோசனை இல்லாமல் செய்ததால் பலருக்குப் பொருள் நஷ்டமும் கால விரயமும் ஏற்பட்டன.

தேவூர்,
23—8—71 ஏ. சுப்பிரமணியம்

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது

# ஒகாஸா



வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்க-ளுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

**OKASA CO. PVT. LTD.**
**P. O. BOX 396, BOMBAY-1.**

---

ஸ்பென்ஸரின்

## ஸி.ஏ.க்யூ (C.A.Q)

இருமல் மற்றும் ஜலதோஷத்துக்கு. திரவ வடிவிலும் மாத்திரையாகவும் கிடைக்கும்.

**ஸ்பென்ஸர் & கம். லிட்.,**
சென்னை & கிளைகள்.

---

## மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்;
— ரண சிகிச்சையையும் தடுங்கள்



# திராட்சை விழிகள்



அய்க்கண்

அலெக்ஸாண்டர், பெர்ஷியாவுக்குள் நுழைந்து முன்னேறிக் கொண்டிருந்தான்.

'கிரேக்க நாட்டின் தலைமைத் தளபதி' பட்டத்துடன் புறப்பட்ட அவன், த்ரேஸ் வழியாக டான்யூப் நதியையும் கடந்து சித்திய நாட்டை வென்று, கலகம் செய்த தீப்ஸ் நகரத்தைத் தீக்கிரையாக்கி விட்டு, அந்த நகரத்தின் முப்பதாயிரம் பிரஜைகளை அடிமைகளாக விற்று விட்டு, ஹெலஸ்லெஸ் பாண்ட் வழியாகப் பெர்ஷிய சாம்ராஜ்யத்துக்குள் நுழைந்தான்.

கி. மு. 334, மே மாதம், க்ரானிகஸ் கரையில் தங்கியிருந்த பெர்ஷியப் படையைத் தோல்வியடையச் செய்து முன்னேறிய அலெக்ஸாண்டர், சார்டிஸ், எபிஸஸ், மைலெட்டஸ், ஹாலிகார்னஸ் ஆகிய நகரங்களை ஒவ்வொன்றாக வென்று கொண்டு வந்தான்.

அந்த மாஸிடோனிய வீரனைத் தடுத்து நிறுத்தித் தோல்வியடையச் செய்வதற்காக, பெர்ஷிய சக்கரவர்த்தி மூன்றும் டேரியஸ், பெரும் படையுடன் இஸ்ஸஸ் சமவெளியில் காத்துக் கொண்டிருந்தான். தன் சாம்ராஜ்யத்தின் ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் படைகளை வரவழைத்திருந்தான் டேரியஸ்.

"பாவம், அலெக்ஸாண்டர், சிறு பையன்! முன்பின் யோசிக்காமல், சிங்கத்தின் குகைக்குள் புகுந்து விட்டது ஆடு. க்ரானிகஸில் இருந்த சிறு படையை வென்று விட்ட இறுமாப்பில் துள்ளிக் கொண்டு இங்கே வருகிறான். அவனுடைய துள்ளும் காலை ஒடித்து அவனைத் தூள் தூளாக்குகிறேன், பார்!" என்று தன் மகன் ஸைரஸிடம் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான் பெர்ஷிய மன்னன்.

அலெக்ஸாண்டரை ஒரு மன்னனாகவே அவன் மதிக்கவில்லை! தன்சாம்ராஜ்யத்துக்குள்புகுந்த அலெக்ஸாண்டரையும் அவனுடைய வீரர்களையும் 'வேட்டையாடி விரட்டிக் கொல்லும் வேடிக்கையைப் பார்த்து ரசிப்பதற்காகவே, டேரியஸ் தன் குடும்பத்தையும் அங்கே அழைத்து வந்திருந்தான்.

அவனுடைய தாயும் மனைவியும் மகளும் மற்ற அரச குடும்பத்தினரும் இசைக் கலைஞர்களும் நாட்டியக் காரிகளும் சமையற்காரர்களும் அடிமைகளும் நிறைந்திருந்த டேரியஸின் படை வீடு, ஒரு போர்ப் படை தங்கியிருக்கும் கூடாரம் போலவே தோன்றவில்லை. ஏதோ பொழுதுபோக்குக்காக வேட்டையாட வந்த அரச பரிவாரம் போலவே இருந்தது!



இ. மு. 333.

ஆடு, சிங்கத்தின் மேல் மோதியது!

பெர்ஷிய சாம்ராஜ்யத்தின் பல்வேறு மாகாணங்களிலிருந்து திரட்டப்பட்ட படை, அளவில் பெரிதாயிருந்ததே ஒழிய, போர் செய்வதில் ஒரேயடியான ஒழுங்குமுறையில்லாமல், பலதரப்பட்ட முறைகளில் போரிட்டது. அலெக்ஸாண்டரின் திறமையான குதிரைப் படையும், காலாட் படையும், பெர்ஷியாவின் பெரும் படையை, ஒரு சிறு கல் பெரிய கண்ணாடிப் பாத்திரத்தை உடைப்பது போல் நொறுக்கி விட்டன.

போரிலே டேரியஸின் மூத்த மகன் உள்ளாவும் பல தளபதிகளும் மாண்டார்கள். டேரியஸ், ஒரு குதிரையில் ஏறித் தப்பித்து ஓடி விட்டான். எஞ்சியிருந்த படைகள் புறமுதுகிட்டுச் சிதறி ஓடின.

'வேட்டை'யை வேடிக்கை பார்க்க, டேரியஸ் அழைத்து வந்த பெண்கள் கூட்டம், மாஸிடோனிய வீரர்களால் சிறைப் பிடிக்கப்பட்டது. போர் முடிந்ததும், அலெக்ஸாண்டர் கைதிகளாக இருந்த பெர்ஷிய ராஜ குடும்பத்தாரைப் பார்க்க வந்தான்.



"இதுவரை 40 அமெச்சூர் நாடகங்களிலும் 68 சினிமாக்களிலும் நான் டாக்டர் வேஷத்தில் கௌரவ நடிகராக ஆக்ட் பண்ணியிருக்கேன்; இதைப் பாராட்டி என் மனைவி எனக்குக் கௌரவ டாக்டர் பட்டம் கொடுத்து விட்டாள்!"

பெண்கள் எல்லோரும் பயத்தால் நடு நடுங்கிக் கொண்டிருந்தார்கள். தான் வென்ற ஊர்களையும் மக்களையும் அலெக்ஸாண்டர் எப்படி நடத்துவான் என்பதைக் கேள்விப்பட்டிருந்த ராஜ குடும்பத்தினர், சாவது உறுதி என்று நினைத்துக் கலங்கிக் கொண்டிருந்தார்கள். சிதைந்த நகரங்களும் தீப்ஸ் நகர மக்களும் அவனிடம் பட்ட துன்பங்கள், அவர்களுடைய நினைவில் வேலாய்க் குத்திக் கொண்டிருந்தன.

அலெக்ஸாண்டர் கூடாரத்துக்குள் நுழைந்ததும் எல்லாப் பெண்களும் — டேரியஸின் தாய், மனைவி உட்பட — எல்லோரும் கீழே விழுந்து அவனைக் கும்பிட்டார்கள்— ஒரே ஒருத்தியைத் தவிர.

திகைத்துப் போன அலெக்ஸாண்டர், அந்த ஒருத்தியைக் கூர்ந்து பார்த்தான்.

உள்ளே ரஸம் ததும்பும் திராட்சைக் கனி போல் பளபளக்கும் கரு விழிகள்—அளவாக வளர்ந்து நீண்ட புருவங்களுக்கும் பட்டாம் பூச்சி போல் படபடக்கும் நீண்ட இமைகளுக்கும் நடுவே, பால் கிண்ணத்தில் நீந்தும் கரு வண்டு போல் அகன்ற வெண் விழியில் சுழலும் அந்தக் கரிய கண்கள்—அலெக்ஸாண்டருடைய வலிய நெஞ்சை ஊடுருவித் தைத்தன.

இளம் பொன்னிறமான சுருண்ட அழகிய கூந்தல், நீண்டு வளர்ந்த ஒளி நெற்றி,—எள்ளுப் பூ போல் எடுத்து நிறுத்திய மூக்கு, கொழுவிய கன்னங்கள், சிவந்த அளவான தேன் கசியும் இதழ்கள், அரச குடும்பத்துக்கு உரிய நீண்ட தந்தக் கைகள், தங்கத்தில் வார்க்கப்பட்ட சிலை போன்ற உடல் வாளிப்பு — பெண்ணுக்கு உரிய ஒவ்வோர் அழகு உறுப்பையும் ஒன்றுசேர்த்துப் படைத்தால் எப்படி இருக்கும் என்ற ஆசை எழுச்சியில் இறைவன் படைத்த ஓர் உருவம் போன்ற அழகும் வனப்பும், அலெக்ஸாண்டரின் உள்ளத்தைத் துளைத்துத் தடுமாறச் செய்தன.

இத்தகைய ஓர் அழகியை அவன் இதுவரையில் கண்டதேயில்லை. ஓவியங்களிலேகூட இவ்வளவு அழகான பெண்ணை யாரும் கற்பனை செய்து வரையவில்லை.

அலெக்ஸாண்டர் திகைத்து நின்றான்: 'இப்படி ஓர் அழகியா?'

அவள் வணங்காமல் நிற்பதையும் அலெக்ஸாண்டர் திகைப்பதையும் கவனித்த டேரியஸின் மனைவி திடுக்கிட்டாள்:

"பார்ஸைன்! பார்ஸைன்! வணக்கம் செலுத்து....." என்று மெதுவாக, அழுத்தமாகத் தன் மகளிடம் அவள் கூறுவது, அலெக்ஸாண்டரின் கூரிய காதுகளில் விழுந்தது.

பார்ஸைன் அசையவில்லை; அப்படியே நின்றாள். அலெக்ஸாண்டரைப் பார்த்த அவள் கண்களில் பயமோ, மிரட்சியோ காணவில்லை. அந்தக் கரிய திராட்சை விழிகள், அவனைத்தான் திகைக்க வைத்தன. அந்த விழி வீச்சின் முன்னால், அந்த வீரன் ஒன்றும் பேசத் தோன்றாமல் நின்றான்.

"பேரரசே! இவளை மன்னியுங்கள்.... இவளுக்கு ஏதோ சித்தப் பிரமை ஏற்பட்டுவிட்டது" என்று மகள் சார்பாக, அரசி, அலெக்ஸாண்டரிடம் கெஞ்சினாள்.

அவன், பார்ஸைனின் மேல் பதிந்திருந்த தன் பார்வையைத் திருப்பி, சுற்றிலும் நடுங்கிக் கொண்டிருந்த அரச குடும்பத்தினரையும் பரிவாரங்களையும் பார்த்தான்.

பாவம்! ஒவ்வொருவர் முகத்திலும் எத்தனை பீதி! எவ்வளவு பயம்! உயிர் பிழைப்போமா என்ற கவலை ஒவ்வொரு முகத்திலும் ஆழ்ந்த சோகப் பின்னணியில் கவிந்திருந்தது.

அவர்களையும், வழக்கம்போல் கடுமையான தண்டனைக்குள்ளாக்க, ஏனோ அவனுக்குத் தயக்கமாயிருந்தது.

அந்தக் கரிய திராட்சைப் பழ விழிகள்தாம் காரணமோ?

"இளவரசி! இத்தனை பேரும் என்னைப் பணிந்து வணங்கும்போது, நீ மட்டும் ஏன்

# இரு இடங்களிலும் சிறப்பாக பணியாற்ற –

# பேருதவி புரிகிறது பிரஸ்டிஜ் Prestige

உங்களைப் போன்ற பெண்கள் அலுவலகம் செல்வதால் வீட்டு வேலைகள் தடைப்படாமலிருக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் (ப்ரீத் என்பது இதன் ஏற்றுமதிப் பெயர்). ஆகவே உங்களால் இரு இடங்களிலும் சிரமமின்றி சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது பிரஸ்டிஜ் (அல்லது ப்ரீத்),எப்படியெனில் எப்பொழுதையும் விட கால்பங்கு நேரத்திலேயே சமையல் தயார்!...அதுவும் பலவகைப் பதார்த்தங்களுடன்!'

எரிபொருள் சிக்கனத்துடன், சமையல் அறையும் துப்புரவாக இருக்க உதவும்,பிரிஸ்டிஜ்/ப்ரீத். ஆகவே திறமையாக செயல்பட வழி செய்கிறது. பிரஸ்டிஜ் அல்லது ப்ரீத் குக்கரில் தயாரான உணவுகளில் ஊட்டச்சத்தும் மிகுந்துள்ளது.

பிரஸ்டிஜ், ப்ரீத் இரண்டுமே வாழ்நாள் பூராவும் உழைக்க உத்தரவாதமுள்ளவை. மேலும் நாடு பூராவிலும் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை அளிப்பதும் இது ஒன்றே. உதிரி உறுப்புகள் எங்கும் கிடைக்கின்றன.

பரிவுடன் பேருதவியளிப்பது—பிரஸ்டிஜ்/ப்ரீத்.

பிரஸ்டிஜ் ஒன்று பெறுங்கள்—வேலைக்குச் செல்லும் பெண்மணியாகவும் வீட்டைப்பேணும் தலைவியாகவும் விளங்குங்கள்.

உள் நாட்டுக்கு

ஏற்றுமதிக்கு






டி. டி. பிரைவேட் லிமிடெட், பெங்களூர் 16

TTP-6175

பணியாது நிற்கிறாய்?'' என்று பார்ஸைனிடம் கேட்டான் அலெக்ஸாண்டர்.

அவளுடைய கரிய விழிகள் சிறிதே சிரித்தன; கோவை இதழ்கள் அசைந்தன:

'' உங்களைவிடப் பெரும் பேரரசர்களை நான் பார்த்திருக்கிறேன். ஒரு சிறிய கிரேக்க நாட்டுக்கு மன்னரான நீங்கள், எங்கள் நாட்டில் ஒரு சிறு பகுதியை வென்று விட்டதால், உங்களை எப்படி ஒரு பேரரசராக நான் கருத முடியும் ?''

சிறிதும் அச்சமோ கலவரமோ இல்லாமல் பேசினாள் பார்ஸைன்.

அலெக்ஸாண்டர் விதிர்விதிர்த்துப் போனான். அவளுடைய ஒவ்வொரு சொல்லும் இடி போல் அவனுடைய தன்மான உணர்வை நொறுக்கியது. வீரத் தோள் துடிக்க, கண்கள் சிவக்க, புருவம் குவிய, நெற்றி சூடேற, உதடுகள் படபடக்க அவளைப் பார்த்து ஏதோ சொல்ல நினைத்தான்....

ஆனால் அந்தத் திராட்சைப் பழ விழிகள்—தன் ஒரே சுழற்சியில் உலகத்தையே வெல்லக் கூடிய அந்த அழகு விழிகளின் முன்னால்..... குறுகிய, சிறிய நாட்டு அரசனாக அவன் தனக்குத் தானே நாணிக் குமைந்தான்....

அந்த விநாடி அவனுடைய உள்ளத்திலே ஒரு பொறி தெறித்துக் கனன்றது: ஒரு புதிய உத்வேகம் அவன் எண்ணத்தை உந்தித் தள்ளியது.

சட்டென்று கூடாரத்திலிருந்து வெளியேறினான் அவ்வீரன்:

'இனி, அந்தத் திராட்சைப் பழ விழிகளின் முன்னால் அவன் ஒரு பேரரசனாக — உலகத்திலே யாரும் வெல்லாத நாடுகளையெல்லாம் வென்று, உலகத்தின் மிகப் பெரும் சக்கரவர்த்தியாகவே மீண்டும் தோன்றுவான் !'

தன்னுடைய பரம்பரை எதிரி நாடான பெர்ஷியாவைத் தோல்வியடையச் செய்வதையே இதுவரை இலட்சியமாகக் கொண்டிருந்த அந்த இளம் வீரனின் லட்சியம் விரிந்து பரவியது...

உலகத்தையே தன்னடிக் கீழ்ப்படுத்தி, ஏக உலகச் சக்கரவர்த்தியாக, அகில உலகின் மாபெரும் வீரனாக, அவன் மீண்டும் அந்த உலகப் பேரழகியின் முன்னால் வந்து நின்று...

கனவுகள் — இனிய காதல் கனவுகள், எழுச்சியூட்டும் வீரக் கனவுகள் — அந்த இளைஞனுடைய உள்ள அரங்கிலே தோன்றி நிலைத்து நினைவில் தடம் பதித்தன.....

இதோ, புறப்பட்டு விட்டான், மாஸிடோனிய இளைய மன்னன்.

சிடான் வீழ்ந்தது: ஏழே மாதங்களில் டைர் பிடிபட்டது: இரண்டே மாதங்களில் காஸா பணிந்தது....

கி. பி. 332ல் எகிப்து அவனை அரசனாகத் தான் பணிந்து ஏற்றுக் கொண்டது.

இதற்கிடையே பெர்ஷியச் சக்கரவர்த்தி டேரியஸ், அலெக்ஸாண்டரிடம் கைதிகளாக இருந்த தன் குடும்பத்தையும், இழந்த தன் கௌரவத்தையும் மீட்பதற்காக, இருநூறு போர் ரதங்கள் அடங்கிய பெரும் படையுடன் நினெவே அருகில் போருக்குத் தயாராக நின்றான்.

கி. மு. 331, அக்டோபர் 1–ந் தேதி ஆர்பெலாவில் தொடங்கிய போரில், பெர்

> எல்லாவித சுரா பானமும் தியாஜ்யம்.
>
> — ஆபஸ்தம்ப சூத்திரம்



> கோபம் வரும்பொழுது, மனத்தைக் கட்டுப்படுத்து; கஷ்டம் வரும்பொழுது, தன்னுதவியையே நம்பு; அதிகமாகக் கொடுத்தால் ஒன்றையும் ஏற்காதே. பயத்தால் பீடித்தால், பயத்திற்குக் காரணம் எதுவோ அதனிடம் நேரில் செல்.
>
> — சீனம்



> காப்பிப் பொடி கிலோ பன்னிரண்டு ரூபாய்; மூக்குப் பொடி கிலோ இருபத்தைந்து ரூபாய்! -பாமர்

ஷியப் பெரும் படை மீண்டும் தோற்றது: டேரியஸின் இரண்டாவது மகன் ஹைஸ்டாஸ் பெஸ் கொல்லப்பட்டான்; டேரியஸ் மீண்டும் தப்பி ஓடினான்.

அந்தத் திராட்சை விழிகள், அலெக்ஸாண்டரின் மான உணர்ச்சியைத் துளைத்துத் தூண்டி வெறி கொள்ளச் செய்து இயக்கிக் கொண்டே இருந்தன...

அடுத்து பாபிலோன் வீழ்ச்சி: சூஸாவின் தோல்வி.....

முன்பு பெர்ஷிய மன்னன் ஸெர்க்ஸெஸ், ஏதன்ஸ் நகரத்தைக் கொளுத்தியதற்குப் பழிக்குப் பழியாக, அலெக்ஸாண்டர் பெர்ஷியாவின் தலைநகர் பெர்ஸெபாலிஸைத் தீக்கிரையாக்கினான்.

காஸ்பியன் கடற்கரை.... பாக்ட்ரியா... மத்திய துர்க்கிஸ்தான்... கைபர் கணவாய்... இந்தியாவின் சிந்துச் சமவெளி —

டேரியஸைத் தொடர்ந்து பார்த்தியா வழியாகச் சென்றான். அங்கே, டேரியஸ் தன் நாட்டு யாத்ராப்புக்களில் ஒருவனான பெஸ்ஸஸால் கொல்லப்பட்டுக் கிடந்தான்.

மேலும் சென்று கொண்டிருந்தான் அலெக்ஸாண்டர்.

அந்த இளைஞனின் வீர யாத்திரை நிறைவு பெற்று முடிவடைந்தது.

கி. மு. 325. உலகத்தின் மாபெரும் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த வீரப் பெருமகனாக, சூஸாவுக்குத் திரும்பினான் அலெக்ஸாண்டர்.

சூஸாவில் பாதுகாப்பில் இருந்த பார்ஸைனைத் தனியாகச் சந்தித்தான் அவன். அந்த அழகிய திராட்சை விழிகளை மீண்டும் அவன் நேருக்கு நேராகச் சந்தித்தான்.

"பார்ஸைன்! சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு சொன்னாயே, ஒரு சிறு நாட்டு அரசனான என்னை வணங்க மாட்டேனென்று. இதோ பார், இந்தப் பத்து வருஷங்களில் எத்தனை நாடுகளை வென்று அடக்கி அடிமைப் படுத்தி வந்திருக்கிறேன்! உலகத்தின் மிகப் பெரும் சாம்ராஜ்யத்தை ஏற்படுத்தியிருக்கிறேன். என்னுடைய இந்த மகத்தான வெற்றிக்குத் தூண்டுதலாகவும் உத்வேகமாகவும் இருந்த உன்னுடேயே, இந்த சாம்ராஜ்யத்தை ஆள வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த மாபெரும் அரசை உன்னுடைய அழகிய விழிகளுக்குக் காணிக்கையாக்குகிறேன், பார்ஸைன்!"

அந்த வீர இளைஞன் காதல் உணர்விலே எவ்வளவு உளம் கசிந்து பேசினான்!

உலக வரலாறு இதுவரை கண்டிராத ஒரு வீரன், தன்னிடம் காதல் பிச்சை கேட்பதைக் கண்டு திகைத்தாள் பார்ஸைன். சில வினாடிகள், அவளுடைய சிந்தனை குழம்பித் தெளிந்து நிலைத்தது.....

"பேரரசே! உங்கள் வீரத்துக்கு நான் தலை வணங்குகிறேன். உலகத்தின் மிகப் பெரும் வீரர் என்பதை ஏற்றுக் கொள்கிறேன்: ஆனால் என்னுடைய கணவராக உங்களை ஏற்றுக் கொள்ள முடியாததற்கு மன்னியுங்கள்.... நான் திருமணம் செய்து கொண்டு, குழந்தைகள் பெற்று, அப்பிள்ளைகளைப் போர்க்களத்தில் பலியிட நான் விரும்பவில்லை. அமைதிக் காலங்களிலே பிள்ளைகள் பெற்றோருக்கு ஈமக் கடன் செய்வார்கள்: போர்க் காலங்களில் பெற்றோர், பிள்ளைகளுக்கு ஈமக் கடன் செய்கிறார்கள்... என் தந்தை, முதற் போரிலே மூத்த மகனைப் பறி கொடுத்தார். இரண்டாவது போரிலே அடுத்த மகனை இழந்தார். இது போல் என் பிள்ளைகளையும் நான் பறி கொடுத்து அழத் தயாராயில்லை!.... எந்த நாட்டில் பெற்றோர்கள் பிள்ளைகளைப் போர்க்களத்திலே பலியிட்டுக் கதறி அழமாட்டார்களோ, அந்த நாடுதான், நான் வாழ விரும்பும் நாடு: அந்த நாட்டின் அரசன்கூட வேண்டாம் — அந்த நாட்டின் ஓர் அடிமையை மணந்து கொள்ள நான் தயாராயிருக்கிறேன்."

பாரசீக ரோஜாவின் இதழ்களைப் போல் மெல்லென அசைந்த அந்த உதடுகளின் வழியே தெளிவாக ஒலித்த சொற்கள், பெரும் புயலாக அலெக்ஸாண்டரைத் திகைத்து நிலைகுலையச் செய்தன.

"பார்ஸைன்! என்ன சொல்கிறாய்?.... போரையும் மரணத்தையும் நாம் எப்படித் தவிர்க்க முடியும்? நாடு என்றால் அரசனும், அரசன் என்றால் போரும், போர் என்றால் சாவும் இருக்கத்தானே செய்யும்?"

"அப்படியானால் நானும் கடைசி வரை கன்னியாகவே இருக்க வேண்டியதுதான்.... இந்த நாட்டிலே போர் இல்லாமல், அமைதியும் ஒற்றுமையும் நிலவச் செய்ய முடியுமானால் என்னைத் திருமணம் செய்து கொள்வது பற்றிப் பேச வாருங்கள்...."

பார்ஸைனின் விழிகளில் ஒளிவிட்ட உறுதியையும் நிச்சலனத்தையும் கண்ட அலெக்ஸாண்டர் ஒன்றும் பேசத் தோன்றாமல் திகைத்துப் போனான்.

அந்த அழகிய விழிகள் தந்த அகத் தூண்டுதலிலே உலகையே திக்விஜயம் செய்து வென்ற அவன், அவளுடைய புதிய நிபந்தனையைக் கேட்டுச் செயலிழந்து நின்றான்.

இதுவரை, வீர மன்னன் பிலிப்பையன் மகனாகச் செயல்பட்டு வீரம் காட்டிய அலெக்ஸாண்டர், இப்போது சிந்தனையாளர் அரிஸ்டாட்டிலின் மாணவனாகச் சிந்திக்கத் தொடங்கினான்.

அரிஸ்டாட்டில் அவனுடைய மாணவப் பருவத்திலே அவன் உள்ளத்தில் உருவாக்கி வைத்திருந்த சிந்தனைப் பொறி, இப்போது பெருகிப் பரவிச் சுடரொளியாய்த் துலங்க ஆரம்பித்தது.....

போர் இல்லாத சாம்ராஜ்யம் அமைப்பதற்கும், பார்ஸைனை மனைவியாக அடைவதற்கும் அவன் ஒரு வழி கண்டுபிடித்து விட்டான்!...

மறு நாள் — கிரேக்க நாட்டுக்கு உரிய கிரீடத்துடனும் அரச உடைகளுடனும் படை



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது

## அந்த 'உணரமுடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு

உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி விரக்தரமாக இருக்கிறது. இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு—சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச்சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட பாஸ்பேட்டுக்கள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.




ஒரு தரமான வார்னர் லாம்பர்ட் தயாரிப்பு

WVT.G4.71

## பற்—
## சிதைவு
## ஏற்படாது.

உங்கள் பற்களைத் தவறாமல் ஆர்யன் டூத் பிரஷ் கொண்டு துலக்குங்கள். பிரஷ்ஷின் தலைப்பாக வடிவமைப்பு, குச்சங்களை உடும்புப் பிடியாக இறுகப் பிடிப்பதற்கான அமைப்பு, மற்றும் கைப்பிடியில் கட்டைவிரல் நன்கு பதிந்து பிடித்துக்கொள்வதற்கான வட்டம்—இவை அனைத்தும் உங்களது எல்லா பற்களையும் பல் இடுக்குகளையும் துப்புரவாகத் துலக்குவதற்குப் பெரிதும் உதவுகின்றன.

ஸ்டாண்டர்டு, டீலக்ஸ், ஸைபர், ஜூனியர் மற்றும் பேபி ஆகிய ரகங்களில், கடினமான, நடுத்தர மற்றும் மிருதுவான குச்சங்களுடன் கிடைக்கின்றது.

## ... என்றுமே




## ஆர்யன் டூத் பிரஷ்

துப்புரவாகத் துலக்குகிறது—
நெடுங்காலம் நீடிக்கிறது.




தி ஆர்யன் பிரஷ் கம். லிட்.
(இந்தியாவின் மிகப் பெரிய பிரஷ் ஃபாக்டரி)

## இப்போது புதிய ஆர்யன் ஷேவிங் பிரஷ்

உறுதியாகப் பற்றும் கைப்பிடியும், வெல்வெட் ஃபினிஷ் நைலான் குச்சங்களும் கொண்ட இந்தச் சிறந்த ஷேவிங் பிரஷ் முக க்ஷவரத்தை சுக க்ஷவரமாக விளங்கச் செய்கிறது.

பாமரர், பணக்காரர் ஆகிய ஒவ்வொருவருக்கும் பிடித்தமான பல்வேறு ரகங்களில் கிடைக்கிறது.





## அழுத பிள்ளை சிரிக்குமாம்...
# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்

அஜீரணம், வாயு, தூக்கமின்மை, வாந்தி, வயிற்றுப் போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.

பசியைத் தூண்டி, ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழுவென்று வளரச் செய்கிறது.




அமிர்தாஞ்சன் லிமிடெட்

வீரர்கள் முன்னிலையில் தோன்றிய அலெக்ஸாண்டரைப் பார்த்து, மேற்கு நாட்டு வீரர்கள் திகைத்தார்கள். அவனுடைய பேச்சைக் கேட்டு அவர்கள் மேலும் திடுக்கிட்டார்கள்.

''வீரத் தளபதிகளே! படைவீரர்களே! நண்பர்களே! உங்களுடைய வீரத்தாலும் ஒத்துழைப்பாலும் உலகத்திலேயே பெரிய சாம்ராஜ்யத்தை என்னால் ஏற்படுத்த முடிந்தது. ஆனால் இந்த சாம்ராஜ்யம் எத்தனை நாட்கள் நீடித்து நிலைத்து நிற்கப் போகிறது? இந்த அலெக்ஸாண்டரைவிடப் பெரியதொரு வீரன் தோன்றிவிட்டால் இந்த என் சாம்ராஜ்யம் அழிந்து விடும். ஆகையால் என்றும் அழியாத ஒரு சாம்ராஜ்யத்தை இப்போது நான் ஏற்படுத்தப் போகிறேன். அதற்குத் தேவை வீரம் அல்ல. அன்பு — ஒற்றுமை!... இன்று முதல் பெர்ஷியாவுக்கும் நமக்கும் உள்ள பரம்பரைப் பகைமை ஒழிய வேண்டும். வாழப் பிறந்த மனிதர்கள் போரிலே பலியிடப்படுவது இன்றோடு தடுக்கப்பட வேண்டும். மேலை நாடு, கீழை நாடு என்ற வேற்றுமை நீங்கி, கலாசாரப் பிணைப்பு ஏற்பட வேண்டும். இனங்கள் ஒன்றுபட்டு ஒரே இனமாக வாழ வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதற்கு முதற் படியாக நமக்கும் இந்த நாட்டு மக்களுக்குமிடையே கலப்பு மணம் நடைபெற வேண்டும். அதுதான் இந்த உலகத்திலே பகைமை நீங்கி நிரந்தர அமைதி நிலவ ஒரே வழி.''

அலெக்ஸாண்டர் ஏதோ வேடிக்கையாகப் பேசுகிறான் என்று பலர் நினைத்தார்கள்.

மேற்கும் கிழக்கும் இணைவதாவது? கலப்பு மணமாவது? கலாசாரப் பிணைப்பாவது?

''நண்பர்களே! டேரியஸின் மகளை நான் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன். அதே போல் நீங்களும் பெர்ஷிய நாட்டுப் பெண்களை மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.''

தளபதிகளும் வீரர்களும் நண்பர்களும் அமைதியாக இருந்தார்கள்; அந்த அமைதிக்கு அர்த்தம்: சம்மதமல்ல.

அரசனுடைய பேச்சு அவர்கள் எல்லோருக்கும் பிடிக்கவில்லை. நண்பன் பிலோட்டஸ் எழுந்தான்:

''அரசே! நீங்கள் கூறுவது காரிய சாத்தியமானதல்ல. கிரேக்கர்கள். கீழை நாட்டுப் பெண்களை மனைவிகளாக ஏற்றுக்கொள்வார்களென்று நீங்கள் எதிர்பார்ப்பது அர்த்தமற்றது.''

மற்றவர்களும் இதேமாதிரி எதிர்ப்புக் குரல் எழுப்பினார்கள்.

அலெக்ஸாண்டர் திடுக்கிடவில்லை; இந்த நிலைமை முற்றிலும் அவன் எதிர்பாராதது அல்லவே?

''சரி, அப்படியானால் நான் இனிமேல் உங்கள் மன்னனாக நீடிப்பதிலும் அர்த்தம் இல்லை; என் முடிவை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. என் வழியைப் பின்பற்ற விரும்புபவர்கள் பின்பற்றலாம்; மற்றவர்களுக்கு மாஸிடோனியா செல்லும் வழி திறந்தே யிருக்கிறது...''

மன்னனுடைய முடிவு அவர்களுக்குப் பெரும் அதிர்ச்சியை விளைவித்தது.

அலெக்ஸாண்டருடைய புரட்சிகரமான புதுமையான யோசனை பற்றி அவர்கள் மூன்று நாட்கள் சிந்தித்தார்கள்.

கடைசியில் — தங்களுடைய வீர மன்னனை அவர்களால் பிரிய முடியவில்லை.

அலெக்ஸாண்டருக்கும் பார்ஸைனுக்கும் திருமணம் நடந்த அதே சமயத்தில், அவனுடைய தொண்ணூறு படைத் தளபதிகளும் நண்பர்களும் ஆசிய நாட்டுப் பெண்களை மணந்து கொண்டார்கள்.

இரண்டு பெரிய இனங்களையும் கலாசாரங்களையும் திருமண பந்தத்தாலும், பொதுவான அடுத்த சந்ததிகளாலும்



" மந்திரிகள் தங்கள் சம்பளத்தில் 10% குறைத்துக் கொண்டார்களே! அதுபோல் நீங்களும் கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்களேன்; உங்களுக்குத் தியாகிப் பட்டம் வழங்குகிறேன்.''

''நன்றி சார்! பதிலுக்கு நீங்கள் ஃபோன், பங்களா, கார், மின்சாரம், பணியாட்கள் எல்லாம் இலவசமாக அளிக்கிறீர்களா?''

ஒன்று சேர்த்த அரிய செயல், வரலாற்றிலே எழுதப்பட்டது.

இந்தப் புதுமையான மண விழா பற்றி அறிந்ததும், அரிஸ்டாட்டில் தம் மாணவனைப் பாராட்டிக் கடிதம் எழுதினார்:

'அலெக்ஸாண்டர்! நீ நாடுகளை வென்றது மட்டுமல்ல, காலத்தையும் வென்றுவிட்டாய். எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின்னால் ஏற்பட வேண்டிய ஒரு கலாசாரப் பிணைப்பு முறையை இப்போதே தொடங்கி வைத்த உனக்கு வரலாற்றில் நிலையான இடம் கிடைக்கும். ஆனால் காலத்துக்கு முந்திய உன்னுடைய சாதனை நீடித்து நிலைபெறுமா என்பதுதான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது...'

அந்தச் சிந்தனையாளரின் தீர்க்கதரிசனம் உண்மையாகி விட்டது.

அலெக்ஸாண்டருக்குப் பின்னால் வந்த அசோகனும் அக்பருமே, நிலையான வெற்றி பெறத் தவறிவிட்ட ஒரு முயற்சியில், அவன் எப்படி நீடித்த வெற்றி பெற முடியும்?

## "மான் விழியாள்" என பிறர் போற்றும் கண்ணழகி!

**கண்ணுக்கு களிப்பூட்டும் அவள் கண்ணழகுக்கு காரணம்...ல்யூர் அவுட்டர் ஐ க்ரீம்.**



பொலும் பாலோர் கண்களின் கீழ் கருவளையம், சுருக்கம் இவற்றால் அவதியுறுகிறார்கள். வயதாக ஆக இது இன்னும் அதிகரிக்கும். பெண்ணின் வடிவழகுக்கு அடிப்படையான விழியழகைக்



கெடுத்துக் கொள்வதா? அதுவும் ல்யூர் அவுட்டர் ஐ க்ரீம் இருக்கையில்! கண்களைச் சுற்றி தின-மும் தடவி வந்தால், கன்னியரின் களையூட்டும் கண்களைத் தந்துவிடும். ஓய்வும், உறக்கமும் கூடவே அளித்தால், இதனைப் பயன்படுத்தும் மகளிருக்கு மயக்கும் விழிகள் சொந்தமாகிவிடும்.




**கண்ணை இமைகாப்பது போல கண் அழகைக் காப்பது ல்யூர் அவுட்டர் ஐ க்ரீம்.**

டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்: தென் இந்தியா
டி.டி. கிரிஷ்ணமாச்சாரி & கோ

---



*கரத்தில் சிறந்தவை!*
*உழைப்பில் உயர்ந்தவை!!*
*கெட்டியான சாயம்!!!*



REGD. TRADE MARK
80s x 80s

# எங்கள்
# சங்கு
## மார்க்
# லுங்கிகள்

**தி மதராஸ் பளயகாட் கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
'சங்கு நிலையம்' 31, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1
கிளை: 67, ரவீந்திர சாரணி, கல்கத்தா-1

# இதயம் என்ன விலை?

இதயத்தை விலை பேசும் நிலைப்பாடைக் காணும் பொழுது, எங்கோ ஓர் இதயம் பலவீனமுற்றிருக்கிறது, அந்த இதயத்தை நீக்கி மாற்று இதயம் பொருத்துவதற்காக இதயம் விலை பேசப்படுகிறது என்று யாராவது தீர்மானித்து முடிவுக்கு வந்தால் அவர்களுக்கு நூற்றுக்கு நூறு மதிப்பெண் கொடுத்துவிடலாம். இந்தக் கதையின் நாயகனுக்கு இதயம் பலவீனம். அதுவே கதையின் இதயத்தையும் தாக்கிப் பலவீனமாக்குகிறது.

உருவ ஒற்றுமையை மையப் புள்ளியாகக் கொண்டு புனையப்படும் நாடகங்களும் கதைகளும் ஏராளமாகிக் கதைக்குப் பலவீனத்தை உண்டாக்குவது தொற்றி வரும் பழக்கம்.

இந்தக் கதையிலும் நடிகன் கண்ணனும், செல்வந்தர் மகன் கோபியும் உருவத்தால் ஒற்றுமை கண்டு ஒரு பெண்ணைக் காதலிக்கிறார்கள். அந்தப் பெண்ணோ கண்ணனைக் காதலித்துக் கோபியின் கரம் பற்றுகிறாள்.

கரம் பற்றிய பின் கணவனின் இதயம் பலவீனமானது என்பதை அறிகிறாள். கணவனுக்குச் சித்தப்பாவோ சிறந்த டாக்டர். ஊசி போட்டே கோபியின் இதயத்தைச் சமாளித்து வருகிறார். கோபிக்குத் தன் இதயம் பலவீனமானது என்னும் விஷயம் தெரியாது. அதற்காக நாடகத்துள் நாடகமாக இன்னொரு நாடகம் நடிக்கப்படுகிறது. அதாவது மனைவியின் இதயம் பலவீனமானது என்று சித்திரிக்கப்படுகிறது. அவளுக்குத் தன் இதயத்தைப் பொருத்தக் கணவன் தீர்மானிக்கவும், கணவனுக்குத் தன் இதயத்தைத் தர மனைவி சம்மதிக்கவும், கடைசியில் இதயமாற்று ஆபரேஷனுக்கு அவசியம் இல்லாமலே கதை முடிகிறது!



கண்ணனாகவும் கோபியாகவும் இரட்டை வேடம் தாங்கி நடிக்கிறார் ஸ்ரீ ஏ. வி. எம். ராஜன். கதையின் குளறுளாக்கும் கண்ணனின் பாத்திரத்தை 'அம்போ' என்று விட்டுக் கதை முடிகிறது.

ராதாவாக நடிக்கும் புஷ்பலதா தம் பாத்திரத்தின் தரமறிந்து நடிக்கிறார். அவருக்குச் சகோதரனாகச் சுந்தரம் என்னும் பெயர் கொண்ட பாத்திரமாக வரும் திரு கிருஷ்ணமூர்த்தி, இயல்புக்கு அப்பால் சென்று நடித்தாலும், நாடகத்துக்கு உயிர் ஊட்டுகிறார். காமெடியனா, மறை கழன்றவனா என்று கண்டுபிடிக்கக் கதையின் முடிவுவரையில் காக்க வைத்திருப்பது அவர் நடிப்புக்குப் பலம். கதைக்கு...?

திரு ராஜன் கண்ணனாகவும் கோபியாகவும் இரு வேறு இயல்புகளைக் கொண்ட பாத்திரமாக நடிக்கிறார். நெப்போலியனைப் பற்றிய நாடகமோ என்று திகைக்க வைத்துவிட்டு அடுத்த காட்சியில் சமூகக் கதைதான் என்று நிம்மதி பெறச் செய்தது நல்ல உத்தி.

பலவீனமான கதை அமைப்புக் கொண்ட இந்த நாடகத்துக்குப் பலம் சேர்ப்பது நடிகர்களின் தேர்ந்த நடிப்பு ஒன்றேயாகும். கதை என்னதான் பலவீனமாக இருந்தாலும் நடிப்பால் பலவீனத்தை மறைக்க முடியும் என்று காட்டும் ஆற்றலை 'இதயம் என்ன விலை' நாடகம் உணர்த்துகிறது. அந்த அளவுக்கு இது வெற்றியான நாடகம் என்று சொல்லலாமே!

— அக்ஷயம்

# இறுதித் தீர்ப்பு

**நா**டு நகரமெங்கிலும் அந்த மகானைப் பற்றியே பேச்சு. அபூர்வ சக்தி வாய்ந்தவர் என்னும் செய்தி எப்படித்தான் பரவியதோ, வெகு தொலைவில் இருந்தெல்லாம் மக்கள் சாரி சாரியாக வரலாயினர். அவரைத் தரிசித்த மாத்திரத்திலேயே தங்கள் துயர் தீர்ந்ததாக மன நிம்மதி பெறலாயினர்.

எளிய கோலமும் உள்ளமும் படைத்த அவரிடம் சிரத்தை கொண்டு மக்கட் சமுதாயம் சிரம் தாழ்த்தியது. அதைக் கண்டு ஆணவமுற்று அவர் தலைநிமிரவில்லை. ஆண்டவன் சித்தம் இதுவென்று அவனில் அதிக நாட்டம் செலுத்தலானார். அவரது எளிய திருக் கோலம் அண்டை அயல் நாட்டவரையும் கவர்ந்து இழுத்தது. அவர் இருக்கும் இடம் புனித யாத்திரை ஸ்தலமாகியது. அவரைத் தரிசித்து மகிழ, அவருடன் சில கணங்களாவது நெருக்கமாக அமர்ந்து, தங்கள் கவலையை மறக்க மக்கள் விரும்பினர்.

மகான் அவர்கள் கொண்டு வரும் காணிக்கையையோ நன்கொடையையோ ஏற்பதில்லை. பற்றற்ற நிலையில் அவற்றைத் தம் கரங்களால் தொட்டு அவர்களிடமே திருப்பித் தந்து வந்தார்.

'மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்
ஈசனைக் காட்டும் உடம்பு'

என்னும் ஔவை ஞானக் குறளின் உருவமாயிருந்த அவர் புகழைக் கேட்டு அந்த நாட்டு



மன்னன் மனத்துள் மறுகினான். அவனை விட்டு அவனைக் காட்டிலும் மக்கள் மகானைப் பூசிப்பதென்றால் அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. முதலில் மக்கள் தனக்கு மரியாதை செலுத்த வேண்டும். பிறகு இந்த மகானுக்கு மரியாதை செலுத்தட்டும் என்று எண்ணினான்.

துறவிகளின் மனம் தூய்மையானது. சிறியவர்கள், பெரியவர்கள், நல்லவர்கள், கெட்டவர்கள் என்று பகுத்து அதற்கேற்ப ஒழுகுபவர்கள் அல்லவே! மன்னனின் மனம் தெரிந்திருந்தாலும் மகான் அதைப் பொருட்படுத்தவில்லை. தம்மை அண்டி வருபவர்களுக்கு ஆறுதல் அளிக்கும் ஞான ஒளியாகத் திகழ்ந்து வந்தார்.

தினமும் அவர் எதிரிலே பஜனைகள் நடக்கும். பெரியவர்களது அறவுரை நடைபெறும். மக்களும் ஆன்மிக சாதனையில் மனத்தைச் செலுத்தினர். அங்கு சாத்துவீகம் ஆட்சி புரிந்ததே ஒழிய ராஜஸம் அண்டக்கூட முடியவில்லை.

எனவே, மன்னன் தன் ஊழியர்களின் மூலம் பல்வகையான பிரமைக் கருத்துக்களை மக்களிடையே பரப்பலானான். 'இத்துறவி ஒரு வேஷதாரி. இவன் துர்த்தேவதைகளை வசப்படுத்தி வைத்திருக்கிறான். வசியம்—மாயத்தினால் மக்களை ஈர்க்கிறான். மக்கள் ஏமாற வேண்டாம்' என்றெல்லாம் வதந்திகள் உலாவலாயின.

அரைகுறை அறிவு படைத்தவர்கள் மன்னனின் இந்தப் பிரசாரத்துக்கு அடிபணிந்து அகன்றனர். அறிவு சார்ந்தவர்கள் அந்த அர்த்தமற்ற வதந்திகளுக்குத் தங்களை ஆட்படுத்திக் கொள்ளவில்லை. ஆயினும் என்ன முயன்றும் மகானைக் காணப் போகும் மக்கள் கூட்டம் எதிர்பார்த்த அளவு குறையவில்லை. எனவே, மன்னன் மிகுந்த சினம் கொண்டான். அந்தத் துறவியைப் படிய வைத்தே தீருவது என்று கங்கணம்கட்டிக்கொண்டான்.

ஒரு நாள் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமான அவையோர்களைக் கூட்டினான். அத்தனை பேரும் அவனுடைய 'ஆமாம் சாமி'கள். 'இந்தப் போலித் துறவியின் மதிப்பை எப்




படி மன்னோடு மன்னுக்கலாம்? உங்களுக்குத் தெரிந்த உபாயங்களைக் கூறுங்கள்!'' என்று கேட்டான்.

''அரசே! இது என்ன பெரிய விஷயம்? நாளைக்கே மகானைத் தீர்த்துக் கட்டிவிட்டால் போயிற்று!'' வெகு எளிய வழியைச் சொன்னான் ஒருவன்.

''ஊஹூம். ஓர் அழகியை அனுப்பி அவள் கையால் அடிபணிய வைத்தால் அவ்வளவு மதிப்பும் மங்கிவிடும்! இதற்குப் போய் ஒரு 'கொலை செய்வானேன்?'' என்றான் வேறு ஒருவன்.

''திருட்டுக் குற்றம் சாட்டிச் சிறையில் தள்ளுவது இதைக் காட்டிலும் சுலபம், உத்தமமுங்கூட'' என்றான் மூன்றுமவன்.

ஒருவனுடைய யோசனையும் அரசனுக்குப் பிடிக்கவில்லை. ''உங்கள் யோசனை கவைக்கு உதவாது. நானே என் மூளையைச் செலவிட்டு வழி கண்டு பிடிக்கிறேன்!'' என்றான். அவன் கை மீசையை வருடலாயிற்று.

மகானின் பக்கத்து வீட்டில் இருந்த ஒருவனுக்கும் மன்னனைப் போலவே மகானின் பெருமை பொறாமையை உண்டுபண்ணி யிருந்தது. அவன் அவரைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறித் திட்டி வந்தான். ஒரு நாள் இரவு அவன் துப்பாக்கியால் சுடப் பட்டு மரித்தான். பக்கத்தில் வசித்து வந்த மகான் மீது அரசன் அநாயாசமாகக் கொலைக் குற்றத்தைச் சுமத்தினான். அரச னின் ஆட்களும் அந்தக் கொலைக்குக் காது மூக்கு வைத்து. ''அந்த ஆள் மகானின் விழி களில் விரலைக் கொடுத்து ஆட்டிக் கொண் டிருந்தான். மகான் அது பொறுக்காமல் அவனையே தீர்த்துக் கட்டி விட்டார்!'' என்று நம்பிக்கையான ஆதாரபூர்வமான செய்தி யாகப் பரப்பலானார்கள்.

பொய்ச் சாட்சியங்கள் தயாரிக்கப்பட்டன. மகான் சிறைப்படுத்தப்பட்டார். சீட கோடிகளோ ஏதும் பேசத் தோன்றாமல், கைகளைப் பிசைந்து கொண்டு நின்றார்கள்.

'மகான் அப்படி யெல்லாம் செய்திருக்க முடியாது. ஏனெனில் இரவு முழுவதும் அவர் அவர்களுடனேயே இருந்திருக்கிறார். எனவே, இது சூழ்ச்சி, என்பது அவர் களுடைய உறுதியான தீர்மானம். ஆனால் அவர்கள் பேச்சைக் கேட்க யார் இருந்தார்கள்?

நீதிமன்றம் ஏறியது வழக்கு. சீடர்கள் வழக்குரைஞருக்கு ஏற்பாடு செய்ய முனைந் தனர். ஆனால் மகான் தடுத்துவிட்டார். ''உண்மைக்கு யாரும் வாதாடத் தேவை யில்லை. எத்தகைய சோதனை வந்தாலும் அவன் மீது பாரத்தைப் போட்டு விட்டு நாம் வாளாவிருக்க வேண்டும். இந்த நாடகத்தை அவன் ஏன் நடிக்கிறான் என்று நம்மில் யார் கண்டோம்? தீமையிலும் நன்மை ஒளிந் திருக்கும். நீங்கள் இவ்வழக்கில் வீணாக மண்டையை உடைத்துக் கொள்வதைக் காட் டிலும் ஆண்டவனைத் துதியுங்கள். அது உங்களுக்கும் நல்லது; உலகத்துக்கும் நல்லது'' என்று கூறிவிட்டார்.

எதிர்த் தரப்பில் பெரிய வழக்குரைஞர் ஆஜரானார். காரசாரமான வாதங்கள் நடை பெற்றன. பலவகைச் சாட்சியங்கள் விசாரிக்கப்பட்டன. எல்லாம் மகானுக்கு எதிராகவே போய்க்கொண்டிருந்தன.

இருந்தாலும்...

அன்று தீர்ப்பு வழங்கும் நாள். பல்லாயிரம் மக்கள் தீர்ப்பைக் கேட்கக் கூடியிருந்தனர். மகானின் சீடர்களோ கண்ணீர் விழிகளை மறைக்கக் குனிந்த தலை நிமிராமல் நின்று கொண்டிருந்தனர். மன்னனின் 'ஆமாம் சாமி'களோ மீசையில் கைபோட்ட வண்ணம் பெருமிதமாக நின்று கொண்டிருந்தனர்.

அரசனுக்கு எதிராகப் போக முடியாத நீதிபதியோ முதல் நாளிரவே சட்டபூர்வமா கக் குற்றங்களுக்கு ஆதாரம் தேடித் தீர்ப்பை எழுதியிருந்தார். குற்றவாளிக்குக் கடுந் தண் டனை விதித்திருந்தார்.

''இந்த மாதிரிப் போலிச் சாமியார்கள் மக்கள் மனத்தையே கெடுத்துச் சமூகத்தைச் சீரழிக்கிறார்கள். தங்களைப் பூசிக்குமாறு அறியா மக்களை ஏவித் தங்கள் புகழ் பாடும் படி செய்கிறார்கள். பக்கத்து வீட்டுக்கார னைத் தனக்கு விரோதமாகப் பேசுகிறான் என் பதற்காகவே இவர் அவனைக் கொன்றிருக் கிறார். இதில் எள்ளளவும் ஐயமில்லை. எனவே, இவருக்கு ஆயுள் தண்டனை அளிக்கிறேன்.'' தீர்ப்பை எழுதிய பின் படித்துப் பார்த்த அவருக்கே தமது தீர்ப்பில் ஓர் இறுமாப்பு! 'கன கச்சிதம் நமது தீர்ப்பு! இனி நம் பதவி உயர்வுக்குத் தடையில்லை' — இப்படியும் கணக்குப் போட்டது அவர் மனம்.

குறித்த நேரத்தில் தீர்ப்பை வாசிக்கத் தமது நியாய ஆசனத்துக்கு வந்தார். தீர்ப்பை வாசிக்க ஆரம்பித்த அவருக்குக் கை நடுங் கியது. குரல் நடுங்கியது. ஒரு கணம் பொறி தட்டியது.

''நான் மன்னருக்குச் சாதகமாகத்தான் தீர்ப்பு எழுதி வந்தேன். இந்த நியாய சிம்மா சனத்தில் ஏறி உட்கார்ந்ததும் என் கண்க ளுக்கெதிரே உள்ள அந்தத் தீர்ப்பு நியாயம் ஆனதல்ல என்று என் அந்தராத்மா கூறு கிறது. எங்கெல்லாம் மகான் மீது குற்றங் களைச் சுமத்தி யிருக்கிறேனோ அங்கெல்லாம் மகானுக்குப் பதிலாக 'மன்னன்' என்ற சொற்

# உறுதியானது பத்திரமானது

## பாங்க் ஆஃப் பரோடாவில் உங்கள் ஃபிக்ஸெட் டெபாஸிட் கணக்கு.

கடும் உழைப்பினால் சம்பாதித்த சேமிப்புகள், பிராவிடண்ட் பண்ட் பூரணமடைந்த இன்ஷூரன்ஸ் பாலிஸிகள் அல்லது எதிர்பாராது கிட்டிய லாபங்கள். இவற்றை நிச்சய வருமானம் இல்லாத வழிகளில் அனாவசியமாக செலவழித்து விடாதீர்கள். உங்கள் பணத்தை பாங்க் ஆஃப் பரோடாவில் ஃபிக்ஸட் டெபாஸிட்டில் முதலீடு செய்யுங்கள். அது உங்களுக்கு நிரந்தரமாக, கணிசமான வருமானத்தை தருகிறது தவிர நாங்கள் உங்கள் டேர்ம் டெபாஸிட் ரசீதுகளை இலவசமாகவே பத்திரமான பாதுகாப்பில் வைக்கிறோம்.

ஃபிக்ஸட் டெபாஸிட்டுகள் 100 ரூபாயோ அல்லது அதற்கு மேற்பட்ட தொகையோ ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஒரு வருடத்திற்கோ அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கோ எவ்வளவு நீண்ட காலத்திற்கு டெபாஸிட் கட்டப்படுகிறதோ, அதற்குத் தகுந்த அதிக வட்டி தரப்படுகிறது. நாங்கள் அரை வருடத்திற்கு ஒரு முறை வட்டி தருகிறோம் விதிகளுக்கு ஏற்றவாறு வரி சலுகைக்கு தகுதி பெற்றது.

மற்றும் ஒரு வருடத்திற்குட்பட்ட குறுகியகால டெபாஸிட்டுகளும் ஏற்றுக் கொள்ளப் படுகிறது. 15 அல்லது 90 நாட்களுக்குட்பட்ட கேட்டவுடன் டெபாஸிட்டுகள்



**பாங்க் ஆஃப் பரோடா**

Shilpi BOB 7A/71 Tam

களே என் விழிகள் முன் தோன்றுகின்றன. மன்னர் எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் அளிக்கட்டும். நான் மகிழ்ச்சியுடன் ஏற்கத் தயாராக இருக்கிறேன். நியாய சிம்மாசனத்தின் தீர்ப்புப்படி மகான் மரியாதையோடு விடுவிக்கப்பட வேண்டியவர். மன்னரே குற்றவாளிக்குரிய தண்டனையை அடைய வேண்டியவர்!''

இப்படிக் கூறியவாறு தமது ஆசனத்திலிருந்து நீதிபதி எழுந்தார். தம் கையிலிருந்த பேனாவை ஒடித்தெறிந்தார். மகானின் காலடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.

உதடுகளில் மென்னகை விளையாட மகான் அவரைத் தூக்கி நிறுத்தினார். 'அவன் மகிமையை அறிந்தவர் யார்?' என்ற கேள்வி மன்னன் உள்பட மக்கள் அத்தனை பேர் உள்ளத்திலும் எழுந்தது. அலகிலா விளையாட்டுடையான் தளிரடிகளிலே சென்று மடிந்தது. ஆதாரம்: 'கதா லோக்' —ரா. வி.

# படித்துப் பாருங்கள்

## Bhavan's Journal Annual Number 1971

'பவன்ஸ் ஜர்னல்' ஆண்டு மலர் எப்படி இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. அது பவன்ஸ் ஜர்னல் ஆண்டு மலரைப் போலவேதான் இருக்கும் என்று அனைவரும் அறிவர். தத்துவ சாஸ்திரம் - சமயம் - கலாசாரம் - அறிவியல்-ஆன்மானுபவம் இத் துறைகளில் பூரணத் தகுதி வாய்ந்த மகாபுருஷர்களும், கவிஞர்களும், அறிஞர்களும் மணி மணியான கட்டுரைகளை அளித்திருக்கிறார்கள். உடலால் மறைந்தும், உபதேசத்தால் சிரஞ்சீவிகளாகிவிட்ட அவதார புருஷர்களும், மகான்களும் இந்த மலரின் ஏடுகளில் நம்முடன் பேசுகிறார்கள். நாட்டில் நன்னெறியைக் காக்க வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பாக அடிக் கோடிட்டுக் காட்டுகின்றன, பல கட்டுரைகள். சுருங்கச் சொன்னால், கருத்துக்குக் கவின் விருந்து.

Bhavan's Journal, Chowpathy Rd.,Bombay-7; price: Rs. 2.00.

## சித்திரக் கந்தபுராணம்

முருகன் என்றால் அழகன் என்றுபொருள். எனவே அழகுருவமாக அவனை ஓவியத்திலோ சிற்பத்திலோ கண்டு களித்து வழிபடுவதே மிகப் பொருத்தம். முருகப் பெருமானின் அருளும், ஆற்றலும், ஞானமும், வீரமும், பிரேமையும் பொங்கி வழியும் அற்புதமான கந்தபுராண நிகழ்ச்சிகளை இந்த நூலில் கண்ணையும் கருத்தையும் கொள்ளை கொள்ளும் வண்ண வண்ணச் சித்திரங்களில் கண்டு களிக்கிறோம். இந்த அரிய சித்திர நூலை அளித்துள்ள 'வினு'வின் விரல்களில் ஏதோ ஒரு வரப்பிரசாதமே வந்து விளையாடியிருக்கிறது எனலாம். ஓவிய விளக்கங்கள் கதையை நன்கு தொடர்புறுத்தி விளக்குகின்றன. காகிதம் அச்சு எல்லாம் கனஜோர். முருகனன்பில் சிறந்த தமிழில்லம் ஒவ்வொன்றிலும் இருக்க வேண்டிய கலைப் பொக்கிஷம்.

பதிப்பாசிரியர்: முல்லை தங்கராசன், கிடைக்குமிடம்: பயனீர் பப்ளிகேஷன்ஸ், 87, நேதாஜி ரோட், பொள்ளாச்சி, விலை: ரூ. 1—50.

## ஆழ்வார்கள் வரலாறு

இறைவன் திருவருள் பெருமையை எண்ணி எண்ணி இறும்பூது எய்தி, அவன் திருவடி தொழுவதையே பிறவிப் பயனாகக் கொண்டு பக்தி நோற்றுப் புகழுடம்பெய்திய பக்த சிரோமணிகளின் மகிமை அளவிடற்கரியது. கதிரவனை விடக் கதிரவன் கிரணம் படிந்த ஆற்று மணல் அதிகம் சுடுவது போல், ஆண்டவனைவிட, ஆண்டவனின் மெய்யடியார்களின் மகிமை அளவிடற்கடங்காதது என்பது பெரியோர் வாக்கு.

திருமாலின் மெய்க் கீர்த்தியை இசைக்கும் மெய்யன்பர்களுள் முதன்மை வாய்ந்தவர்கள் ஆழ்வார்கள்; அவனருளாலே அவன் தாள் வணங்கி, அவனது வரை கடந்த குணங்கள் அளவிலா ஆற்றல், அடியார்க்கு எளியவனாகி அவர்கள் இடுக்கண் களைவதில் அவன் காட்டும் அளவு கடந்த பரிவு இவற்றை யெல்லாம் அநுபவித்து மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களை உய்விக்கும் பெருங் கருணை படைத்த மேற்படி பக்த சிரோமணிகளின் வரலாறு பக்தர்களுக்குத் தெவிட்டாத இன்பம் தர வல்லது.

இந்நூலாசிரியர் திரு டி. எஸ். இராஜகோபாலன் ஆழ்வார்கள் பதின்மரின் வரலாறுகளையும், சூடிக் கொடுத்த சுடர்க்கொடியெனப் புகழுடன் திகழ்ந்த ஆண்டாளின் வரலாற்றையும் கவிதைகளாகவே யாத்து அளித்திருக்கிறார். கவிதைகள் யாவும் இலக்கண மரபில் பிழை தவிர்ந்து நிற்பதுபோலவே கவிதை மரபிலும் கவின்பெற்று விளங்குவது பாராட்டுக்குரியது. உதாரணத்துக்கு ஒரு கவிதை:

வெள்ளம் மேய மாலவனை
  விண்பால் தூய மேயவனை
உள்ளம் படியும் நிலையானை
  உம்பர் வடமா மலையானைக்
கள்ளுண் கொன்றைச் சடையானை
  உரத்தே ஒருபால் உடையானை
உள்ளிப் பரவி ஆடினனால்
  ஊறுஞ் சுவையிற் பாடினனால்

இந்நூலில் உள்ள அனைத்துப் பாடல்களும் கனிந்த சுவையுடன் விளங்குகின்றன. பாடல்களின் இடையே வரும் வரலாற்றுச் சான்றுகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் அரும் பதங்களுக்கும் விளக்கம் கொடுத்துத் தெளிவாக்கியிருப்பது மிகவும் உபயோகமாயுள்ளது. நம் மதிப்புக்குரிய ஸ்ரீ சின்ன ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளின் ஆசியுரையும், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகளின் அருளுரையும், உபய மீமாம்ஸா வல்லப, பண்டித ரத்ந அபிநவ தேசிக, உத்தமூர் தி. வீரராகவாசாரியார் ஸ்வாமிகளின் மதிப்புரையும் இந்த நூலின் தகுதியை வெகுவாக உயர்த்தியிருக்கின்றன.

பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், 66, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—5; விலை: ரூ. 8.00.

# நடுகற்கள் சொல்லும் நயமான கதைகள்

தமிழ்நாட்டு வரலாற்றினைப் பற்றிய செய்திகள் அறிவதில் கல்வெட்டுச் சாசனங்கள் பேர் உதவியாக இருந்து வருகின்றன.

பண்டைத் தமிழர்கள் போரில் வீர மரணம் அடைந்த வீரனை நடுகல் நட்டுப் போற்றி வந்தார்கள். இப்படிப்பட்ட நடுகற்களைத் தமிழ்நாட்டில் பல பகுதிகளில் காணலாம். இந்தச் சிலைகளில் கல்வெட்டுக்கள் இருக்கும். அவற்றில் போரில் பட்டவனைப் பற்றிய செய்தியும் போரைப் பற்றிய செய்தியும் காணப்படுவதுண்டு.

சமீபத்தில் கல்வெட்டு ஆராய்ச்சி முகாமில் பயின்ற மாணவர் நாகலிங்கம். (அவருக்குச் சொந்த ஊர் திருவண்ணாமலைக்கு அண்மையிலுள்ள ஒரு கிராமம்.) பயிற்சி முகாம் முடிந்து சொந்த ஊருக்குத் திரும்பிய நாகலிங்கம் தம் தந்தையாரை ஊரில் ஏதாகிலும் சிலை இருக்கிறதா என்று விசாரித்திருக்கிறார். கிராம மக்கள் 'இந்தக் கிராமத்தில் இந்தக் கழனியில் ஒரு சிலை இருக்கிறது; அந்தக் கிராமத்தில் கால்வாய்க்கரையில் ஒரு சிலை இருக்கிறது' என்று சொல்லி யிருக்கிறார்கள். இச் சிலைகள் சிலவற்றுக்குக் கிராம மக்கள் வேடியப்பன் கோவில் என்று சொல்லி எண்ணெய் முழுக்காட்டிப் பூசைகளும் செய்து வருகிறார்கள். கல்வெட்டு ஆராய்ச்சிப் பயிற்சி முகாமில் தேர்ச்சி பெற்ற அந்த இளைஞர் நெருங்கிச் சென்று சிலைகளைப் பார்த்தபோது அவை நடுகற்கள் என்பது தெரிய வந்திருக்கிறது. கிராமத்தைச் சுற்றி அக்கம் பக்கங்களில் கிட்டத்தட்ட பன்னிரண்டு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இச் செய்தியைச் சென்னை தொல்பொருள் இலாக்கா இயக்குநர் திரு இரா. நாகசாமி அவர்களிடம் தெரிவிக்கவே, அச்சிலைகளின் படிமம் எடுக்க உடனே தமது துறை நிபுணர்களையும் வண்டியையும் அனுப்பி



கொற்கை அகழ்வாராய்ச்சியில் கி. மு. இரண்டாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களோடு கிடைத்த பானை ஓடுகள்.

உதவியதை திரு நாகலிங்கம் உணர்ச்சிவேகத்தோடு கூறுகிறார்.

நடுகற்களின் படி எடுக்கச் சென்ற தொல்பொருள் இலாகாவினர் எத்தனையோ விதமான பயமுறுத்தல்களுக்கு உள்ளாயினர். உள்ளூர் மக்கள் உதவ முன்வரவில்லை. ஏன், இதில் உற்சாகம் காட்டி, தொல்பொருள் இலாக்கா குழுவினரை அழைத்து வந்த திரு நாகலிங்கத்தையே சற்றுப் பயமுறுத்தி ஒதுங்கிவிடச் செய்திருக்கிறார்கள்!

ஆனால் சற்றுப் படிப்பு வாசனை நுழைந்துள்ள கிராமங்களில் உள்ளூர்ப் பெருமக்கள் இவர்கள் எடுத்துள்ள முயற்சியின் முக்கியத்துவத்தை உணர்ந்து பலவிதமான உதவிகளையும் உண்டியையும் நல்கியிருக்கிறார்கள்.

இப்போது செங்கம் தாலூக்காவில் கிடைத்துள்ள பன்னிரண்டு கல்வெட்டுக்களில் ஏழு கல்வெட்டுக்கள் பல்லவ, சோழ மன்னர்கள் காலத்தைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. அதாவது சிம்ம விஷ்ணு பல்லவன் காலம் தொடங்கி முதலாவது பராந்தக சோழன் காலம் வரையுள்ள கல்வெட்டுக்களாகும்.

மகேந்திர பல்லவன் முப்பதாண்டு காலமே ஆண்டான் என்று இதுகாறும் கருதப்பட்



மகேந்திரவர்மன் காலத்திய நடுகல்.

டுள்ளது. ஆனால் இக்கல்வெட்டு இப்பொழுது முதல் மகேந்திர பல்லவன் ஆட்சி காலத்தைக் குறித்துப் புதுச் செய்தியை நல்குவதால் மிகவும் முக்கியத்வம் வாய்ந்ததாகிறது.

இதனையொட்டி அப்பர் பெருமானின் காலமும் வேறுபடவேண்டி யிருக்கும்.

கல்வெட்டுத் துறையில் பல காலம் செலவிட்ட திரு சா. கணேசன் அவர்கள், ''தமிழர்களுக்கு உரைநடை கிடையாது; எல்லாம் செய்யுள் வடிவிலேயே எழுதினார்கள் என்பது தவறு. தமிழனுக்கு அருமையான உரைநடை இருந்தது என்பதனை இந்தக் கல்வெட்டுக்கள் நிரூபித்து வருகின்றன'' என்று கூறுகிறார்.

மேலும், ''பல சுவைமிக்க சொல்லாட்சிகளை இந்தக் கல்வெட்டுக்களில் பார்க்கிறோம். உதாரணமாக இன்று யாராகிலும் 'குடுத்தான்' என்று எழுதினால் தவறு என்போம். 'கொடுத்தான்' என்பதுதான் சரி. 'கொடு' என்பதுதான் பகுதி என்போம். ஆனால் கல்வெட்டுக்களில் எல்லாம் ''குடுத்தான்'' என்றே வருகிறது. இப்படி எழுதுவதே பண்டைய வழக்கு. அத்துடன் எழுத்து வடிவம்

எப்படி எப்படியெல்லாம் மாறி வந்துள்ளன என்பதைப் பார்ப்பதும் மிக சுவை தரத்தக்க விஷயமாகும்'' என்கிறார் கணேசன்.

தமிழகத் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகா இயக்குனர் திரு ஆர். நாகசாமி அவர்களைச் சந்தித்து அவர் இலாக்கா இன்னும் என்னென்ன ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிறது என்பதை விசாரித்தேன். புராதன சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இருபத்தி மூன்று ஞாபகார்த்தச் சின்னங்களைப் பாதுகாப்பதில் ஈடுபட்டிருக்கின்றனர் என்றார். தவிர கொற்கையில் அகழ்ந்ததில் கிடைத்த சில பொருட்கள் இலக்கியத்தில் கொற்கையைப் பற்றி நாம் படிக்கும் விஷயங்களுக்குச் சாட்சியங்களாக விளங்குகின்றன. முக்கியமாகக் கொற்கையில் வாழ்ந்த மக்கள் உபயோகித்த அடுப்புக்கரி கிடைத்துள்ளது. அந்தக் கரியை விஞ்ஞான ரீதியில் ஆராய்ந்ததில் கி. மு. 750ம் வருஷத்தியதாக இருக்க வேண்டும் என்று எண்ணுகின்றனர். அதேபோல் மிக மிக வழுவழுப்பான ஓட்டாஞ்சல்லிகள் கிடைத்துள்ளன. அதைப் பார்க்க கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்குமோ என்று கருதுகிறார்கள். அதன் காலத்தை நிர்ணயிக்க பம்பாய் டாட்டா விஞ்ஞானக் கழகத்துக்கு அனுப்பியுள்ளனர். அவர்களும் விஞ்ஞான ரீதியாக கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று உறுதிப்படுத்திவிட்டால், இத்தகைய பானைகளை உபயோகித்த கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த மௌரியர்களுக்கும் தமிழகத்துக்கும் தொடர்பிருந்தது நிரூபிக்கப்படலாம். இது தமிழக சரித்திரத்தில் மிக முக்கியமான அம்சமாக இருக்கும்.

— எஸ். வி. எஸ்.



நிக்ஸனும், ஹுஸாக்கும், டிட்டோவும் தேவலோகம் சென்றபோது ஒவ்வொருவரும் ஒவ்வொரு கேள்வி கேட்க அனுமதிக்கப்பட்டார்கள்.

நிக்ஸன் முன்னால் சென்று, ''வியட்நாம் போர் எப்போது முடியும்?'' என்று கேட்டார்.

கடவுள்: முப்பது வருஷங்களிலே!

நிக்ஸன் விசித்து விசித்து அழுதார்!

ஹுஸாக் அடுத்தபடியாக ''எப்பொழுது செக்கோஸ்லோவேகியா ரஷ்யர்களின் பிடியிலிருந்து விடுதலை பெற முடியும்?'' என்று கேட்டார்.

''எண்பது வருஷங்களாகலாம்!'' என்றார் கடவுள். ஹுஸாக் கண்ணீர் விட்டு அழுதார்.

டிட்டோ கடைசியாக வந்து நின்று, ''இன்னும் எத்தனை பொருளாதாரத் திட்டங்கள் தீட்டினால் யூகோஸ்லேவியா சரியானபடி சுபிட்சமடைய முடியும்?'' என்றார்.

கடவுள் கண்ணீர் பெருக்கத் தொடங்கினார்.

ஆதாரம்: கார்டியன் - தகவல்: பி.எஸ்.எம்.

## கல்கத்தா மரியாதை

கல்கத்தாவில் டாக்ஸிகளுக்கு மரியாதை வாரம் நடந்தபோது ஒருவர் தமக்கு ஏற்பட்ட அனுபவத்தை 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் எழுதினார்:



''நேற்று நான் பிராபோர்ன் சாலையில் டாக்ஸிக்காக நின்றேன். இருபத்தி மூன்று டாக்ஸிகள் வர மறுத்துவிட்டன. எட்டு டாக்ஸிகள் கூப்பிட்டபோது நிற்கவேயில்லை. கடைசியில் முப்பத்திரண்டாவது டாக்ஸி டிரைவர் என்னை ஐந்தாவது ஆசாமியாக டாக்ஸியில் ஏற்றிக் கொண்டார்.''

- தகவல்: பாலி

## எப்போது வேண்டுமானாலும் வரலாம்

மேற்கு ஜெர்மனியில் பல தொழிற்சாலைகளிலும் அலுவலகங்களிலும் இப்போது புதிதாக ஒரு திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதாவது ஊழியர்கள் எப்போது வேண்டுமானாலும் வேலைக்கு வரலாம்; எப்போது வேண்டுமானாலும் வீட்டுக்குப் போகலாம். ஒரு வாரத்தில் குறைந்த பட்சம் இவ்வளவு மணி நேரம் வேலை செய்தாக வேண்டும் என்ற நிபந்தனை மட்டும்தான் உண்டு.

இந்தத் திட்டம் பெரும் பயன் அளித்திருப்பதாகக் கூறுகிறார்கள். ''எப்போதையும் விட இப்போது ஊழியர்கள் அதிக மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். அவர்கள் செய்யும் வேலை அதிகரித்திருக்கிறது'' என்கிறார்கள் மேற்கு ஜெர்மனியில் மிகப் பெரிய எண்ணெய்க் கம்பெனியான 'எஸ்ஸோ' நிறுவன நிர்வாகிகள்.

-விக் எண்ட் - தாஜா

## அது ஏன்?



அவங்க வீட்டு பாலு பி. ஏ. ரெண்டாம் வருஷம் படிக்கிறதாய் பெருமையாச் சொல்லிக்கிட்டாங்க.... உடனே நான் சொன்னேன், எங்கண்ணனும் 'டென்த்' ரெண்டாம் வருஷம் படிக்கிறதாக. உடனே 'கொல்' என்று சிரிச்சாங்களே! அது ஏன்?—லயா

Printed & published by B. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# FORGED FOR TOUGHNESS AND GROUND FOR PRECISION






# FORGE-FORM TWIST DRILLS

Addison Forge-Form Drills are first forged in electronically controlled machines coupled to high frequency Generators and then ground to a super precision finish on automatic grinders equipped with time controlled switches and cold running, rotationally stable and vibrationless bearings.

This unique combination of toughness and precision has won for Addison Drills a commanding position in the export markets of U.S.A., Canada, U.K., West Germany, Sweden, Denmark, Holland, Belgium, Italy, Greece, Australia & New Zealand.

**ADDISON & COMPANY LTD., MADRAS-2**
*(A Member of the Gauge & Tool Makers' Association U.K.)*

**DISTRIBUTORS:**

J. N. Marshall & Co., Bombay — *for Maharashtra, Gujarat & Part of Madhya Pradesh.*

Macneill & Barry Ltd., Engineering Division — *for West Bengal, Bihar, Assam, Orissa, Uttar Pradesh, Haryana, Punjab, Delhi & Rajasthan.*

Addison & Co. Ltd., Madras — *for Tamil Nadu and Coastal Andhra, Himachal Pradesh, Jammu & Kashmir & Part of Madhya Pradesh;*

Addison & Co. Ltd., Bangalore — *for Mysore State;*

Batliboi & Co. Private Ltd., Secunderabad — *for Andhra Pradesh excluding Coastal Andhra.*

Batliboi & Co. Pvt. Ltd., Ernakulam—*for Kerala State;*

**OVERSEAS DISTRIBUTORS** in U. K., U. S. A., Canada; Denmark, Holland, West Germany, Sweden, Italy; Greece, Singapore, Thailand, Korea and Philippines.

ATW-27a